

New
Nestlé
Cerelac
instant milk cereal
weaning food
Wheat
Contains all the Goodness of milk!
அறிமுகப்படுத்துகிறோம்
புதிய செரிலாக்!
எப்போதையும் விட
இப்போது சிறந்தது!!
இப்போது புதிய Z-கிலன் முறைப்படி செரிலாக்
தயாரிக்கப்படுவதால், முன்பைவிட எளிதில் ஜீரணமாகிறது!
New IMPROVED
Nestlé
Cerelac
உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் செரிலாக்.
முக்கிய அறிவிப்பு உங்கள் குழந்தைக்கு தாய்ப் பால்தான் மிகவும் சிறந்தது உங்கள் குழந்தைக்
4 மாதங்கள் ஆனதில் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்க
Mudra NES 1358 TAM

# ஜில்லென்று ஒரு லவ் ஸ்டோரி

**தி**னமும் இரண்டு லட்சம் கிளாஸ் அருந்தப்படும் பானம் ரஸனா! இதற்குப் பிள்ளையார் சுழிபோட்டவர் அரீஸ் கம்பாட்டா என்ற இளைஞர். 1959 - ல் பட்டப்படிப்பு முடித்துவிட்டு, தமது தந்தையினுடைய சோடா பாக்டரியில் வேலைக்கு வந்தார். இள ரத்தம். தானும் ஏதாவது புதிதாய்ச் செய்ய வேண்டும் என்ற உத்வேகம். 'என்ன செய்யலாம்? என்ன செய்யலாம்?' - யோசித்தார்.

அப்போதெல்லாம் மார்க்கெட்டில் பவுடர்கள் இருந்தன. அதைத் தண்ணீரில் கலக்கி, சர்க்கரை சேர்த்தால் ஜூஸ் கிடைக்கும். அதேபோல, பாட்டில்களில் ஜூஸ்களின் எஸென்ஸ் கிடைக்கும். அதில் நீர் கலந்து அருந்தலாம்.

பார்த்தார் அரீஸ். 'இந்த இரண்டையும் இணைத்துப் புதிதாய் ஒரு விஷயத்தை நாம் தயாரித்தால் என்ன?'

குஜராத்திலுள்ள தமது அப்பாவின் சோடா பாக்டரியிலேயே ஒரு சிறிய சோதனைச் சாலையை உருவாக்கினார். பொழுது விடிந்து, பொழுது போனால் அங்கே எதையாவது எதனுடனாவது சேர்ப்பது, நிறம், சுவை, ஃப்ளேவர் என்று டெஸ்ட் பண்ணுவதே அரீஸின் வேலை. கடைசியில் யூரேகா! யூரேகா!





• வெற்றிக்கு......

• ......வழிவகுத்த......

• ......விளம்பரங்கள்......



ஒரு பாக்கெட்டில் பௌடரும், கூடவே ஒரு சிறு பாட்டிலில் எஸென்ஸும், சேர்த்து, ரஸ்னா தயாரிக்கப்பட்டு, மார்க் கெட்டில் வெள்ளோட்டம் விடப்பட்டது. அன்றைக்கு இருந்த விலைவாசி நிலைமையில், ஒரு கிளாஸ் ரஸ்னா முப்பது காசுக்குக் கிடைத்தது. ஒரு பாக்கெட் வாங்கினால், முப்பத்திரண்டு கிளாஸ்கள் கிடைக்கும்! மக்கள் அதிகமாய்ப் புழங்கும் கடைகளில், ரஸ்னா இலவசமாய் விநியோகிக்கப்பட்டது.

அதை ருசித்தவர்கள் கவரப்பட்டு, உடனடியாய் வாங்க ஆரம்பித்தார்கள். பாட்டில் குளிர்ப் பானங்கள்,

ஸ்குவாஷ்கள் போன்றவற்றுக்குப் பதிலாக மக்கள் ரஸ்னாவை நாட ஆரம்பித்தனர். கிடுகிடு வென விற்பனை உயர்ந்து, இன்று 85 சதவீத மார்க்கெட்டைப் பிடித்திருக்கிறது ரஸ்னா!

ரஸ்னா-ஆரஞ்சு (சுவை) தான் முதலில் அறிமுகமானது. படிப்படியாய் மேங்கோ, லெமன், பைன் ஆப்பிள், என்று தொடர, இன்று சுமார் பத்து சுவைகளில் ரஸ்னா விற்பனையாகிறது.

''விலை குறைவு என்பது பெரிய பிளஸ் பாயிண்ட் என்றாலும், தரமும், சுவையும் துளியும் குறையாமல் பார்த்துக் கொள்வதுதான் எங்களுடைய ஸ்பெஷாலிடி!'' என்கிறார் ரஸ்னாவின் சென்னை அலுவலக மானேஜர் தாமஸ் சாண்டி. தமிழ்நாட்டைப் பொறுத்தவரை ஜனவரியில் துவங்கினால், செப்டம்பர் வரை ரஸ்னா சீசன்தான். குறிப்பாக ஏப்ரல், மேதான் எங்கள் விற்பனை, சிகரங்களைத் தொடும் மாதங்கள்.

''எக்ஸிபிஷன்களில் ஸ்டால்கள் போடும்போது, அங்கே நாங்கள் வழங்கும் ரஸ்னாவைக் குடித்து விட்டு, ''வீட்டில் நாங்கள் தயாரித்தால் இதுபோன்ற சுவை கிடைப்பதில்லையே!'' என்று பலரும் கேட்கிறார்கள். ரஸ்னாவின் அதிகபட்ச சுவையைப் பெற பாக்கெட்களின் மீது குறிப்பிட்டுள்ளபடியே அதனைத் தயாரிக்க வேண்டும்'' என்று கூறும் சாண்டி, இன்னொரு ரகசியத்தையும் வெளியிடுகிறார் :

''எங்கள் விற்பனை சாதனைக்கு முக்கிய காரணம் எங்களுடைய டீவி விளம்பரம்தான். முதலில் எங்கள் விளம்பரங்களில் தோன்றிய அங்கிதா ஜவேரி என்ற குழந்தையாகட்டும், இப்போது தோன்றும் ஊஷாவாகட்டும், பார்க்கிறவர்கள் மனத்தைக் கொள்ளை கொண்டு விட்டனர்.''

'ஐ லவ் யூ ரஸ்னா வைக்' கண்டு மகிழவே டீ.வி. முன் கட்டளையாக அமரும் குழந்தைகள், ரஸ்னா ரசிகர்களாகி விடுவதில் ஆச்சரியமென்ன! இது ஒரு வித்தியாசமான லவ் ஸ்டோரி!

- எஸ். சந்திரமௌலி

## ஜில் பிரதேசத்திலும் ஜாலியாய்.....

● துருவப் பிரதேசத்தில் வாழும் விலங்குகளின் மூளையில் உள்ள துல்லியமான தெர்மோ ஸ்டாட் போன்ற பகுதி, அவற்றின் உடல் வெப்பத்தை நூறு டிகிரி ஃபாரன்ஹைட்டில் கட்டுப்படுத்தி வைக்கிறது. சுற்றுச்சூழல் வெப்பம் எவ்வளவு குறைந்தாலும் இவற்றால் தாங்க முடிகிறது.

● தொண்ணூறு மைல் வேகத்தில் பனிப்புயல் வீசும்போது கூட அன்டார்டிக் பகுதியில் வாழும் எம்பரர் பெங்குவின் பறவைகள் தங்கள் முட்டைகளைக் கால்களின் இடையே இடுக்கிக் கொண்டு காத்து நிற்கும்.

● ஆர்க்டிக் பிரதேச வாசியான Musk oxen என்ற காளை மாடுகள் மைனஸ் 50 டிகிரி ஃபாரன்ஹைட் குளிரில் சாவதானமாய் மேய்ந்தபடி இருக்கும்.

● போலார் கரடிகள் ஆயுள் முழுவதையும் பனியிலும் பல் கிட்டச் செய்யும் 'ஜில்'லென்ற கடல் நீரிலுமே கழித்துவிடும். இவை நிலப் பரப்பைக் காண்பதே அரிது. முழு வளர்ச்சி அடைந்த போலார் கரடி 1600 பவுண்ட் எடை வரை இருக்கும். உடலின் ஏராளமான கொழுப்புச் சத்தும், கம்பளி போன்ற அடர்ந்த ரோமமும் குளிரிலிருந்து பாதுகாப்புத் தர, கடும் பனியிலும் இது சுறுசுறுப்பாக வேட்டையாடும்.

◄ பெங்குவின்



- ஜீன்ஸ்

# உன்னை நினைச்சேன் பாட்டு படிச்சேன்

துல்லியமான வானம். தென் மேற்குப் பருவக்காற்று தணிந்த வெப்பத்துடன் படபடத்துக் கொண்டிருக்கிறது. மாருதி தியேட்டர். கார்த்திக், சசிகலா, விஜயசக்ரவர்த்தி சகித போஸ்டர்கள். க்யூ. இருக்கை. ஜனங்கள்.

எப்படியெல்லாம்?

முன்னதாக வந்து தன் சார்ந்தவர்களுக்கு இருக்கை பிடித்து வைப்பவர்கள்; நொறுக்குத்தீனி கொறிப்பவர்கள்; புதுக்கருக்குடன் பவுடர், வர்ண ரிப்பன்கள் அணிந்த சிறுமிகள், ரஜினிகாந்த் பனியன்களுடன் முன்வரிசை இளைஞர்கள். விசில் சின்னதாய்த் துரத்த, பொடியன்களின் மஜா அக்ரோபாட்டிக்ஸ் அமர்க்களப்பட, ஒதுங்கின நகரத்துத் தியேட்டரின் இயல்பு மாறாத காட்சிகள்.

''வணக்கம்'' சிலைடுக்கே பலத்த கைதட்டல். ''சிகரெட் பிடிப்பவர்கள் கட்டாயமாக வெளியேற்றப்படுவார்கள்'' அறிவிப்பு வரும்போது குனிந்து பீடி பற்ற வைத்துக் கொள்கிறவர்கள், வெளியேற்றப்பட்டால் ''எனக்கு எழுதப்படிக்கத் தெரியாது'' என்பார்களோ?

ஹோல்டான்!

''சினிமா விமர்சனம் எங்கேய்யா?'' எனப் பிடிவாதம் பிடிப்பவர்களுக்கு மட்டும் தண்டனையாக நாலுவரி :

இரு சமபக்க முக்கோணக் காதல் கதை. மோதல், ரேக்ளா ரேஸ், பிருத்விராஜ்தனம், கோழி பிடித்தல் என சுவாரஸ்யமாக, உடனடியாகக் கதை ஆரம்பமாகிறது. ஆனால் அத்தனையும் பதின்மூன்று நிமிஷங்களுக்கு மட்டுமே. அப்புறம்? வழக்கமான புராதனமான நெடியுடன் சம்பவங்கள், காட்சிகள். ரொம்பத்தான் துடித்து நடிக்கும் (அய்யோ பாவ) கார்த்திக், குண்டு மோனிஷா, கமாராய் சசிகலா, வழக்கம் போல தொங்கட்டான் ஆத்மாவாக காந்திமதி, அழவைக்கும் காமெடி அறுவைகள், கைக்கொடுக்காத இசை....

எதிர்பார்த்து வந்து நிமிர்ந்த ஜனங்கள், நெளியும் ஜனங்களாகி விடுகிறார்கள்.

படத்துக்கு முன் காட்டப்படும் இந்தியன் நியூஸ் ரிவ்யூ அற்புதமாய்ப் புரிகிறது.

சினிமாவுக்கு வைத்திருக்க வேண்டிய டைட்டில் : எதையோ, 'ஒன்னை நினைச்சேன், போட்டு உடைச்சேன்!'

- சுந்தர்ஜி



## ஐடியா கொடுங்கள்...



# பாலம்

### இலவசக் கல்வி

பள்ளிக்குச் செல்லாத அல்லது வாய்ப்பு இல்லாத சிறுவர் - சிறுமியர், முதியோருக்கு இலவசமாகக் கல்வி கற்க வாய்ப்பு அளிக்கிறேன். அத்தகையவர்களை எனக்கு அறிமுகப்படுத்தலாமே? நன்றி.

- ஈ.பி. ராவ்,
83, கம்பர் தெரு,
மஹாராஜா தெரு,
மகேந்திரிபுரி,
கன்னங்குறிச்சி,
சேலம் - 8.

விரக்தி அடைந்து வீட்டை விட்டு ஓ ட லா மா? தொடர்பு கொள். வாழ்க்கையைச் சவாலாக ஏற்போம்.

- ப. ஜீவானந்தம்,
29-A, ஐயனார்
குளம் தெற்கு தெரு,
விழுப்புரம் - 605 602.

### லக்ஷ்மி கடாட்சம்

வால்மீகி ராமாயணத்தில் லக்ஷ்மி கடாட்சத்தை அபிவிருத்தி செய்யும் ஐம்பது சுலோகங்கள் உள்ளன. அவற்றை தேவநாகரி எழுத்திலும் ஒலி உச்சரிப்புடன் தமிழிலும் எழுதி, அத்துடன் ஆங்கிலம் தமிழ் இரண்டிலும் சுருக்கமான பொழிப் புரையும் எழுதியுள்ளேன். புத்தகமாகச் சுமார் 150 பக்கங்கள் வரும். பிரசுரிக்க விரும்புவோர் தொடர்பு கொள்ளலாம். என் உழைப்புக்கு ஏற்ற சன்மானம் எதிர் பார்க்கிறேன்.

- டி.என். ஸ்ரீனிவாசன்,
32, இரண்டாவது மெயின் ரோடு,
டாக்டர் ராமமூர்த்தி நகர்,
கீழ்க்கட்டளை, சென்னை - 600 043.

### பிளம்பிங் வாய்ப்பு

பத்து ஆண்டுகளுக்கும் மேலாக பிளம்பிங் தொழிலில் பயிற்சியும் தேர்ச்சியும் பெற்றுள்ள நான், மேலும் உயர நல் வாய்ப்புக்களை நாடுகிறேன்.

- பொன். பச்சையப்பன்,
திருவள்ளுவர் பிளம்பிங்/
சானிடரி ஒர்க்ஸ்
15, 85 வது தெரு, அசோக் நகர்,
சென்னை - 600 083.

### ஐடியா கொடுங்கள்!

நான் சிறுகதைகள் எழுதி வருகிறேன். உங்கள் வாழ்க்கையில் நடந்த சுவாரஸ்யமான நிகழ்ச்சிகளை எழுதி அனுப்பினால் பெயர் மாற்றங்கள் செய்து சுவையான கதையாக அமைத்து எழுத வசதியாக இருக்கும். விரும்பினால் உதவலாமே?

- எம்.ஜி. முருகன்,
5/1, சௌந்திர
பாண்டியன் சாலை,
விருதுநகர் - 626 001

### விதவைக்கு மறுவாழ்வு

விதவைக்கு மறுவாழ்வு தர எண்ணுகிறேன். எனது 37 வயதை விடக் குறைவாக இருக்க வேண்டும். ஜாதி - மத - பேதமில்லை.

- பி. வேங்கடசாமி,
222, மணிக் காலனி, சங்கர் நகர்,
நெல்லை - 627 357

### "நண்பா, வா!"

இருபத்தைந்து வருடங்களாக என்னுடன் சேர்ந்து படித்து, விளையாடி மகிழ்ந்த நண்பா, காளிதாசா, வேலை கிடைக்கவில்லை என்பதற்காக

### இடியென முழங்க!.....

பட்டிமன்றம், வழக்காடு மன்றம், கவியரங்கம் அமைத்துத் தந்து இடியென முழங்க வேண்டுமா? தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் இலக்கியச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி முத்திரை பதித்து வரும் என்னுடன் தொடர்பு கொள்ளுங்கள்.

- ஆர். கங்கை மணிமாறன்,
கணபதிபுரம், ஏர்வாடி - 609 601.
நத்திலம் வட்டம்.

(பாலம் பகுதி மூலம் இணையும் அன்பர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பேற்க இயலாது.)


கோல் அடிக்க ஓடிவருகிறார் வேகத்தில்
டை பிறக்குது ஏனோ இடுப்பின் பாகத்தில்!
VIP
CHAMP
ஹெர்ரிங்-போன்
எலாஸ்டிக்குடன்
இடுப்பில் நிலையாக
அமர்ந்திடும் ஜட்டி.



!! வடதுருவத்தில் இருப்போருக்குப் பனிக்காலத்தின் போது ஜலதோஷம் பிடிக்காது; ஃப்ளூ மற்றும் இதர சில ஜுரங்கள் வரவே வராது!

காரணம் - வெப்ப நிலை மிக மிகக் குறைவாய் இருப்பதால் நோய்த் தொற்றுக் கிருமிகளால் அந்தச் சூழலில் உயிர் வாழவே முடியாது.

!! உலகிலேயே மிகப் பலத்த காற்று வீசும் இடம் அன்டார்டிகாவில் உள்ளது: ஐந்தாம் ஜார்ஜ் கடற்கரையிலுள்ள காமன்வெல்த் பே என்ற இவ்விடத்தில் மணிக்கு 320 கி.மீ. வேகத்தில் காற்று வீசும்.

!! வெள்ளிரிக்காய் உடலுக்குக் குளிர்ச்சி - எல்லோருக்கும் தெரியும். ஆனால் வெள்ளிரியின் உள்பகுதியில் வெப்பம், சுற்றுப்புறக் காற்று மண்டல வெப்பத்தைக் காட்டிலும் இருபது டிகிரி அதிகமாய் இருக்கும் என்பது தெரியுமா....?

!! முயல்களின் உடல் வெப்பம் 101.5 டிகிரி ஃபாரன்ஹைட்! வீட்டினுள் செல்லப் பிராணிகளாக முயல்களை வளர்த்தால் குளிருக்கு அடக்கமாகக் கூட இருக்கும். நானூற்றைம்பது முயல்கள் உள்ள ஓர் அறையில், மூன்று விறகு அடுப்புகள் எரியும் போது ஏற்படும் கணப்பு கிடைக்கும்!

!! கடும் கோடைக் காலத்தில் தாகம் அடங்க, சூடாக ஒரு கப் டீ (அல்லது வேறு பானம்) அருந்துங்கள். ஐஸ் வாட்டரைக் காட்டிலும் இதற்கே தாகம் தணிக்கும் சக்தி அதிகம்.

!! வெண் பனி என்பது உறைந்து போன மழைத் துளி அல்ல..... நீர் ஆவி நேரடியாகவே வெண்பனியாக மாறுகிறது.

!! வெயிலுக்குப் பாதுகாப்பாகவே முதன் முதலில் குடை பயன்படுத்தப் பட்டது. மழையைவிட வெயில் அதிகம் காய்ந்த நாடுகளில்தான் இதன் உபயோகமும் அதிகமாய் இருந்தது. Umbra நிழல் (லத்தீன்) Umbrella சிறிது நிழல் (இத்தாலிய மொழி).

!! 'பிகினி' - அதாவது டூ பீஸ் நீச்சல் உடை... இதற்குப் பெயர் எப்படி வந்தது? முதன் முதலில் பிகினி அணியப் பட்டபோது பொது மக்களிடையே பேரதிர்ச்சியை ஏற்படுத்தியது. பசிஃபிக் கடலில் Bikini Atoll என்ற பகுதியில் அணுகுண்டு சோதனை வெடிப்பு நடந்தது. அதனால் பிகினி என்றே இவ்வுடைக்குப் பெயர் சூட்டினார்கள் - அணுகுண்டு அளவுக்கு அதிர்ச்சி அளித்ததால்!

# அணுகுண்டு அளவுக்கு அதிர்ச்சி!



– உதய்லால்

## சார்மினார் சானல் :

# சம்சார மெக்கானிக்காக சூப்பர் ஸ்டார்!



சுப்ரமண்யம் சுவாமி

● விசாகப்பட்டினம் முதல் ஹைதராபாத் வரை ஐந்து நாள் பாத யாத்திரையாக வந்தார் சுப்ரமண்யம் சுவாமி. மகாநதி, கோதாவரி, கிருஷ்ணா, காவேரி, வைகை, பம்பா நதிகளை இணைக்கிற திட்டத்தை வலியுறுத்திய பாதயாத்திரை. தமது 755 கி.மீ. யாத்திரை வெற்றிகரமானது என்றார் சுவாமி. நதிகளை இணைக்கிற திட்டத்திற்கு ஒப்புதல் எண்ணம் இல்லாத ஆந்திர முதல்வர் ஜனார்த்தனன் ரெட்டியை 'ஆட்சியை விட்டே விரட்டுவேன்' என்றார். ராஜீவ் காந்தி கொலைவழக்கில் குற்றம் சாட்டப்பட்டுள்ள பிரபாகரனை இந்தியா கொண்டு வர, பிரபாகரனின் நெருங்கின சகா ஒருவர் ஒப்புக் கொண்டிருப்பதாகத் தெரிவித்தார்! அந்த சகா யார் என்று சொல்ல மறுத்தார்!

● குண்டூர் அரசாங்க ஆஸ்பத்திரி, அறுவை சிகிச்சையொன்றில் சாதனை புரிந்துள்ளது. ஒட்டின தலையோடு பிறந்த இரு குழந்தைகளைப் பிரித்துள்ளது. உலக அளவில் இது ஒரு பெரிய மருத்துவ சாதனை. குழந்தைகள் இருபது மாதங்களுக்குப் பிறகு பிரிந்தனர்.



தாசரி நாராயணராவ்
(படம் உதவி : ஆனந்தன்)

● தெலுங்கில் இப்போது சூப்பர் ஸ்டார் தாசரி நாராயணராவ். கைவசம் பதினைந்து படங்கள். எல்லாவற்றிலும் கதாநாயகன் அல்லது அந்த அளவுக்கு முக்கிய பாத்திரங்களில் நடிக்கிறார். இவற்றுள் எட்டு படங்கள் இவருடைய டைரக்ஷனிலேதான் தயாராகின்றன. இந்த ஆண்டின் சிறந்த நடிகருக்கான 'நந்தி அவார்ட்' இவருக்குத்தான் - 'மாமகாரு' என்ற படத்திற்காக. ஐம்பது வயதைக் கடந்து விட்ட சூப்பர் ஸ்டாரின் சமீபத்திய ஒரு படம்; ''சம்சாரல மெக்கானிக்''. டி.வி, ரேடியோ மெக்கானிக் பற்றிக் கேள்விப்பட்டிருக்கலாம். இந்த மெக்கானிக் எங்கெங்கே மனைவி-கணவன் பிரச்னை பெரிதாகிறதோ அங்கு சென்று பிரச்னையைத் தீர்ப்பவர். ஆனால் அந்த மெக்கானிக்கே மனைவியிடம் இருந்து பிரிந்து வாழ்பவர்!

● சிரஞ்சீவியின் ஒவ்வொரு புதுப் படமும் தலை நகரின் 29 தியேட்டர்களில் திரையிடப்படுகின்றன. முதல் ஒரு வாரத்திற்கு 29 தியேட்டர்கள். அடுத்த வாரம் 4 தியேட்டர்களில் மட்டுமே நடை பெறும்! ஒரு வாரத்துக்குள் வசூலை வாரிக் கொள்ளவும், பத்திரிகை, பொது ஜனங்களின் எதிர் விமர்சனங்களால் படம் பாதிக்கப்படாமல் காக்கவும் இந்த உத்தி.

● அமெரிக்காவில் உலகத் தெலுங்கு மாநாடு. அங்கு வசிக்கும் தெலுங்கு மக்கள் இரு பிரிவாகப் பிரிந்து தங்களுக்கு ஆதரவு கேட்டு இங்கு முற்றுகை செய்தார்கள்! இந்தப் பிரிவு, தெலுங்கு மாநாட்டை எந்த ஜாதியினர் முக்கியமாய்ப் பங்கு ஏற்று நடத்துவது என்ற தகராறினால் வந்தது.

- அப்பன்



# கடை உடைமையாளர்களே !

## கவலையிலிருந்து விடுதலைப் பெற இதோ ஒரு வழி.

## கடைக்காரர் இன்ஷ்யூரன்ஸ் காப்பீடு.

உங்கள் கடை உங்களுக்கு விலை மதிப்பற்றது இது முற்றிலும் உண்மையே ஆனால், தீ விபத்து, களவு, வெள்ளப்பெருக்கு மற்றும் பல்வகை விபத்துகளினால் பொருட் சேதமும் இலாப இழப்பும் ஏற்படலாம்.

கடைக்காரர் இன்ஷ்யூரன்ஸ் காப்பீடு உங்களுக்கு வியாபாரத்தில் முழுமையாக ஈடுபட உதவுகிறது. விபத்துகளினால் ஏற்படும் விளைவுகளிலிருந்தும் மற்ற கவலைகளிலிருந்தும் இந்த காப்பீடு உங்களை விடுவிக்கிறது.

கடைக்காரர் இன்ஷ்யூரன்ஸ் காப்பீடு உங்களுக்கு **தீ விபத்தினால்** ஏற்படும் **இழப்புகள்** மற்றும் **வெள்ளப்பெருக்கு, எதிர்பாராதவகையில் பணம் இழத்தல், களவு, மூன்றாம் நபர் பொறுப்பு, சைக்கிள் வண்டிகளுக்கு, நியான் விளம்பர விளக்குகளுக்கு** மற்றும் உங்கள் **பயணச் சாமானுக்கு சேதம்** போன்ற இழப்புகளுக்கு முழுமையான காப்பீடு அளிக்கிறது.

**தனிப்பட்ட முறையில் உங்களுக்கு ஏற்படும் விபத்து, தொழிலாளர்கள் நஷ்ட** ஈடு மற்றும் வியாபாரத்தில் தடை ஏற்பட்டதால் உண்டாகும் **இலாப இழப்புகளையும்** இது பாதுகாக்கிறது.

கட்டடங்கள் மற்றும் அதிலுள்ள பொருட்களின் மொத்த இழப்பு மதிப்பு ரூ 5 இலட்சத்திற்கு மேல் இல்லாதிருக்கையில் மட்டுமே இந்த இன்ஷ்யூரன்ஸ் காப்பீடு வழங்கப்படுகிறது.

**நீங்கள் எப்பொழுது உரிமை கோருகிறீர்களோ அப்போது இன்ஷ்யூரன்ஸ் நிறுவனத்திற்கும் உடனே தெரிவிக்கவும். மற்றும் உரிமைப் படிவத்தை நிறைவு செய்து அத்துடன் காவல்துறை அறிக்கை, தீயணைக்கும்படை நிறுவன அறிக்கை, மருத்துவ [illegible] சீட்டுகள், வழக்கறிஞர் மற்ற நோட்டீஸ்கள் முதலியவைகளை இணைத்து அனுப்பவும். களவு போயிருந்தால் காவல் துறையில் உடனே மனுவை தாக்கல் செய்யவும்.**





ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆஃப் இந்தியா

**General Insurance Corporation of India**

| நேஷனல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட் | நியூ இந்தியா அஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட் | ஓரியண்டல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட் | யுனைடெட் இந்தியா இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட் |
|---|---|---|---|

கடைக்காரர் இன்ஷ்யூரன்ஸ்



கவலை தீர்க்கும் காப்பீடு

எங்கள் உபயோகமான இலவச கையேட்டைப் பெற இக்கூப்பனை நிறைவு செய்து அனுப்பவேண்டிய முகவரி தபால் பெட்டி எண் 681, ஜிபிஓ பம்பாய்-400001

பெயர் ________________

முகவரி ________________

________________

எனக்குத் தேவையான கையேடு ஆங்கிலம் / இந்தி

KI

CANCO/GIC/92-TAM-A

# என்னைக் காணவில்லை...

எல். ஆர். ஜே.



மன்னிப்புக் கேக்கணுமாம் மன்னிப்பு...

எதுக்காம்? நான் என்ன தப்பு செஞ்சேன்? அவங்க எல்லாம் அப்படித்தான் இருப்பாங்களாம், ஆனாக்க நான்தான் அனுசரிக்கப் போகணுமாம்!

எனக்கு ஒவ்வொருத்தர் மென்னியையும் திருகிப் போடணும் போல இருந்தது.

தனிக்குடித்தனம் போனதுக்கப்புறம் கட்டில் வாங்கித் தரேன்னு எங்கப்பா சொன்னது தப்பாம்.

இந்த ராத்திரியிலே புதுக் கட்டில் வாங்கிக் கொண்டு வந்தாதான் சாந்தி முகூர்த்தம்னு மாப்பிள்ளை சொன்னதுக்கு, அதுக்கு அவங்க வீட்டுக்காரங்க ஒத்து ஊதினதுக்கு.

''ஆமா, இப்ப சாந்தியும் வேண்டாம், ஒண்ணும் வேண்டாம்''னு நான் சொன்னது தப்பாம்!

''சே... சே நீங்க எல்லாம் ஆம்பிளைங்கன்னு சொல்லிக்கிறீங்களே, வெக்கமாயில்லே''ன்னு நான் கேட்டது தப்பாம்....

''எங்கப்பா முப்பது வருஷமா உழைச்சு சம்பாதிச்சதை ஒரு நாளிலே தீபாவளியாக்கிட்டீங்களே''ன்னு நான் சொன்னதும் தப்பாம்.

புதுக் கட்டிலிலேதான் படுத்துப்பேன்னு அடம்பிடிப்பவரிடம், 'நீங்க இமே படுத்துக்குங்க, நானும் கூடப் படுத்துக்கிறேன். படுத்துக்கிறதுக்குத்தானே இவ்வளவு ஆர்ப்பாட்டமும், செலவும்'னு நான் சொல்லவா முடியும்? வெக்கம் கெட்டவங்க... சே..

நான் கூனிக் குறுகிப் போய் மாடியிலிருந்து இறங்கி வந்தது தப்பாம்... அடிச்சாலும், பிடிச்சா

இன்லாண்டில் எழுதப்பட்ட ஒரு பக்கக் கதைக்காக பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள தங்க நகைப் பரிசு பெறுபவர் :

- குமாரி பி. பிரேமா,
102 T, Baba Karak Singh Marg,
DIZ Area, (Sector IV)
NEW DELHI - 110 001

பிரசுரத்துக்கு ஏற்கப்பட்ட இதர ஒரு பக்கக் கதைகள் கல்கியில் அவ்வப்போது இடம்பெறும்.

பொன் விழா ஆண்டு : : தங்க நகைப் பரிசு - 19

லும் அங்கேயே இருந்து அவர் மனசை மாற்றியிருக்கணுமாம்...

''பொண்ணுங்களை வளக்க வேண்டிய விதத்திலே வளக்கணும், படிக்க வேலைக் குப் போறாங்கிற திமிரு!''

''தாலி கட்டி முழுசா ஒரு நாள் கூட ஆகலே அதுக்குள்ளே மாப்பிள்ளையை இப்படியா எதிர்த்துப் பேசுவா ஒருத்தி?''

''இப்பவெல்லாம் பொண்ணுங்க ளுக்கு எல்லாத்திலேயும் ஆத்திரம், அவ சரம். ஆம்பிளைங்களுக்குக் கொஞ்சம் கோபம் இருக்கத்தான் செய்யும், அதுக்காக முதல் நாள் இராத்திரியே சண்டை போட் டுக்கிட்டு வரணுமாக்கும்?''

வயதுகள் படித்த வேதத்தில் நான் அழ, என்னைப் பார்த்து எங்கம்மா அழ; அம்மா வைப் பார்த்து இதுவரை எதற்குமே அழாத அப்பா அழ, என் தங்கைகள் மூவரும் மௌனமாய்க் கலங்கிய கண்களுடன் நிற்க, மாப்பிள்ளையின் அக்கா வந்தாள்.

''ஏதோ நடந்தது நடந்து போச்சு. பொண்ணுக்கு நல்ல புத்தி சொல்லி அனுப்பி வையுங்க. கொஞ்சம் அப்படி, இப்படி அனுசரிக்கப் போனாத்தான் குடும் பம் நடத்த முடியும். பி.ஏ., எம்.ஏ.ன்னு படிச்சா மட்டும் போதுமா? ஆம்பளையை எப்படி அனுசரிக்கப் போறதுன்னு தெரிய வேண்டாமாக்கும். இப்படியா விருட் டுன்னு கோவிச்சுட்டு வரது? கொஞ்சம் பொண்ணை அலங்காரம் செய்து கொண்டு விடுங்க. எதுக்கும் கட்டிலுக்கு மூவாயிரம் கொடுத்துடுங்க.''

அப்போதுதான் என் அம்மா சொன் னாள் :

''மாப்பிள்ளைகிட்டே மன்னிப்புக் கேட்டுட்டு, போய் அவரோட படுத்துக்க; நாளைக்கு அப்பா புதுக் கட்டில் வாங்கிக் கொடுத்திடுவார்.''

அந்த வார்த்தைகளில் என் அம்மா எனக்கு அன்னியமாகிப் போனாள்!

இன்னமும் கலியாணத்துக்கு மூணு தங்கைகள்.

என் அப்பா இப்போதே சோர்ந்து விட்டார்.

**நா**ன் போனேன். மாப்பிள்ளையின் காலில் விழுந்து எதற்கென்று தெரியாம லேயே மன்னிப்புக் கேட்டேன். அவர் என் னைத் தொட்டார், அணைத்தார். எனக்கு அவமானம் பிடுங்கித் தின்றது. அந்த ஆணின் அவஸ்தையைத் தீர்த்து வைத்தேன். எனக்குள், இனி விலக முடியாத அவஸ் தைகள்! முத்தங்களில் எனது மூச்சுக் காற்று சிறைப்பட்டது! அப்போதும் கட்டிலுக்கு மூவாயிரம் என்பது ஞாபகத்துக்கு வந்தது!

அவர் என் உடலைத் தேடினார்.

நான் எனக்குள் என்னையே தேடி னேன்.

அவர் தேடியது கிடைத்தது. நான் தேடி யது கிடைக்கவேயில்லை.

அடுத்த நாள் காலை அம்மா கேட் டாள் :

''மாப்பிள்ளை மன்னிச்சுட்டாரா?''

நான் ஒரு புள்ளியாகி இந்தப் பிர பஞ்சத்தில் கலந்து காணாமல் போயே விட்டேன்!



# நலந்தானா? நந்தனம் கல்லூரி நலந்தானா?

**காவிரி, மண்டல் என்று அரசியல்வாதிகள் ஏதாவது ஒரு போராட்டம் அறிவித்தால், அதன் எதிரொலி முதலில் கேட்பது கல்லூரிகளில்தான். தர்ணா, மறியல் என்று தொடரும். போதாக்குறைக்குப் போக்குவரத்துத் தொழிலாளர்களுடன் மோதல் வேறு. இப்படிப் பல மாவணர்கள் பழகி விடுவதால் பிரச்னைகள் உருவாகின்றன :**

"ஒரு கல்வியாண்டில், கல்லூரி 180 நாட்கள் இயங்க வேண்டும். இதில் 75 சதவீத நாட்கள் கல்லூரிக்கு வந்த மாணவன்தான் பல்கலைக் கழகத் தேர்வு எழுத அனுமதிக்கப் படுவான். இந்தக் கல்வியாண்டில் (91-92) எங்கள் கல்லூரி மொத்தமே 59 நாட்கள்தான் இயங்கியது. விடுமுறைகள் தவிர, நிர்வாகக் காரணம் என்று, கல்லூரி முதல்வரால் 121 நாட்கள் லீவு விடப் பட்டது. இந்த நிலையில் குறிப்பிட்ட அளவு வருகைப் பதிவு இல்லாததற்கு மாண வன் எப்படிப் பொறுப்பாக முடியும்? இதனால், மாண வர்கள், தேர்வு எழுதாமலேயே இரண்டாம், மூன்றாம் ஆண்டு சென்றாலும், கடைசியில், எந்த ஆண்டு பரீட்சை எழுத முடியவில்லையோ, அந்த ஆண்டுக்குரிய கல்விக் கட்டணம் செலுத்தி, கல்லூரியில் சேர்ந்து, அவ்வாண்டு பல்கலைக் கழகப் பரீட்சை எழுத வேண்டும். எந்தத் தவறும் செய்யாத மாணவர்களை இவ்வாறு சிரமத்துக்குள்ளாக்குவது சரிதானா?" என்று கேட்டனர் நந்தனம் அரசினர் ஆடவர் கல்லூரி மாணவர்கள். குறைகளைச் சொன்னதோடு கோரிக்கைகளையும் முன்வைத்தார்கள் :

"பல்கலைக் கழகம், நந்தனம் கல்லூரி மாணவர்களுக்குப் பொது மன்னிப்புக் கொடுத்துப் பரீட்சை எழுத அனுமதிக்க வேண்டும். கல்லூரி செயல்பாடு குறித்து விசாரணை செய்து தவறுக்குக் காரண மானவரைத் தண்டிக்க வேண்டும். போதிய அளவு வருகைப் பதிவு இல்லாததால், தாழ்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட வகுப்பு மாணவர்களுக்கு, வரும் கல்வியாண்டில் உதவித் தொகை கிடைக்காது. கல்லூரி வேலை செய்த நாட்களைக் கணக்கில் எடுத்துக் கொண்டு. இவ் விஷயத்திலும் பல்கலைக் கழகம் நல்ல முடிவெடுக்க வேண்டும்."

மாணவர்கள் சொல்லுவது சரிதானா? என்று விசாரிக்க கல்லூரி முதல்வர் கே. என். சிவராமனைச் சந்தித்தோம். பல துறைகளின் தலைவர்கள் முதல்வருடன் அமர்ந்திருந்தனர். லேசாகச் சிரித்த முதல்வர், "நான் பத்திரிகைக்குப் பேட்டி கொடுக்கக் கூடாது. இருந்தாலும் மறுக்கப்படாத பொய், உண்மையாகி விடும். எனவே உண்மை நிலையை உங்களுக்கு உணர்த்துவது என் கடமை. இந்த வருடம் (91-92) முதல்வராகச் சேர்ந்தேன். சேர்ந்தவுடன், கல்லூரியில் மையமான இடத்தில், 'மாண வர்கள் 75 சதவீத அட்டெண்டன்ஸ் பெற வேண்டும்' என்று எழுதி வைத்தேன். மாண வர்களுக்கு இந்த அறிவிப்பே கசப்பாகப் பட்டது. ஏனெனில், எதற்கெடுத்தாலும் போராட்டம், விடுமுறை என்று பழக்கப் பட்டவர்கள் இந்த மாணவர்கள். வருடம் முழுவதும் கல்லூரிக்கே வராமல், முதல்வரை மிரட்டி, 'அட்டெண்டன்ஸ்' வாங்கி விடுபவர்கள்.

"மாணவர்கள் பேரவைத் தேர்தலைக் கல்லூரி துவங்கியவுடன் நடத்த வேண்டும் என்றார்கள். ஆனால் நான், "புதிய மாண வர்கள் ஆகஸ்ட் மாதம் வரை சேர்ந்து கொண்டே இருப்பார்கள். எல்லோரும் சேர்ந்தவுடன் தேர்தல் நடத்துங்கள். அதுதான் முறை" என்றேன். மாணவர்களின் கசப்பு வளர்ந்தது. '59 நாட்கள்தான் கல்லூரி திறந்து இருந்தது' என்பது மாண வர்களின் குற்றச்சாட்டு. இதோ, இவர்

களைக் கேட்டுப் பாருங்கள். 178 நாட்கள் கல்லூரி வேலை செய்திருக்கிறது. வெறும் 59 நாட்கள் வேலை செய்தால், ஆசிரியர் களுக்குச் சம்பளமும், வேறு விடுப்பு வசதி களும் கிடைக்காது. கல்லூரி திறந்துதான் இருந்தது. சில மாணவர்கள் வராததால் நடக்கவில்லை என்று அர்த்தமா? 1700 மாண வர்கள் படிக்கும் இந்தக் கல்லூரியில் 62 மாணவர்கள்தாம் தேர்வு எழுத அனுமதிக் கப்படவில்லை. அதிலும் வருகைப் பதிவு காரணமாகத் தேர்வு எழுத அனுமதிக் கப்படாதவர்கள் 38 பேர்தான். இவர்கள்தான் 59 நாட்கள் கல்லூரி வேலை 'செய்ததாகச் சொல்கிறார்கள். இருக்கட்டும், அந்த 59 நாட்களில், குறைந்தது பத்து நாட்களாவது இவர்கள் கல்லூரிக்கு வந்திருப்பார்களேயா னால் கூடத் தேர்வு எழுத அனுமதி கேட்டு வாங்கியிருப்பேன். கல்லூரியில் சேர்ந்த பிறகு இறுதியில் பரீட்சைக்குத்தான் வரு வேன் என்றால் எப்படி? ஒழுக்கத்தை அமுல் படுத்தக் கூடாது என்கிறார்களா இவர்கள்?

''இந்த ஆண்டு எங்கள் கல்லூரியில் முறை யான இடைத் தேர்வுகளை வைத்து, பல்கலைக் கழகத் தேர்வுக்கு மாணவர் களைத் தயார்ப்படுத்தியிருக்கிறோம். இப் போது தேர்வு நடந்து கொண்டிருக்கிறது. எவ்வளவு கட்டுப்பாடாக நடக்கிறது என் பதை நீங்களே பார்த்துக் கொள்ளலாம். முன்பெல்லாம் போலீஸ் காவலுடன்தான் பரீட்சை நடக்கும். மாணவர் சங்கத் தலை வர்கள், நிர்வாகிகள், தனி ஹாலில் பரீட்சை (?) எழுதுவார்கள். இந்த நிலை யெல்லாம் மாறி விட்டது. அதுதான் சில ருக்குக் கோபம்.

''மாணவர்களைத் தவறான பாதைக்கு இட்டுச் செல்வதில் சில ஆசிரியர்களுக்கும் பங்கு இருக்கிறது. தாழ்த்தப்பட்ட, பிற் படுத்தப்பட்ட மாணவர்களுக்குக் கிடைக்க வேண்டிய உதவித் தொகையை உடனே வாங்கிக் கொடுத்துள்ளேன். கட்டணம் கட்ட வேண்டிய மாணவர்களிடம் மிகவும் கறாராக இருந்து கட்டணம் வசூலித்துள் ளோம். இதெல்லாம் தவறா?'' என்று கேட்கிறார் முதல்வர் சிவராமன். தமிழக முதல்வருக்கு எல்லாவற்றையும் விளக்கி எழுதியிருக்கிறாராம்.

ஆசிரியர்கள் வட்டாரத்தில் விசாரித்த போது, ''முதல்வர் சொல்லுவது சரிதான்; ஒழுக்கத்தை அமுல்படுத்தியதுதான் அவர் செய்த குற்றம்!'' என்றார்கள்.

– ப்ரியன்

படம் : ராஜன்






...கட்டடங்களுக்கும்

# கார்கள் மாட்டிக் கொள்ளும் கறுப்புக் கண்ணாடி!

சொகுசு கார்களில் பவனி வரும் சினிமா நட்சத்திரங்களையும் வி. ஐ. பிக்களையும் பார்ப்பதற்காகக் காத்திருப்போருக்கு இன்று ஏமாற்றமே. காரணம்: கார் கண்ணாடிகளில் கூலிங் கிளாஸ் மாட்டியது போல் ஒட்டியிருக்கும் 'சன் கன்ட்ரோல் ஃபிலிம்'தான்.

பாலியஸ்டரினால் தயாரிக்கப்படும் மெல்லிய திரைச் சீலை இந்த ஸன் கன்ட்ரோல் ஃபிலிம். சில இரசாயனக் கலவைகள் சேர்த்து, நுண்ணுட்பத் தயாரிக்கப்படும் இவற்றைப் பொருத்துவதால் மிகப் பெரிய அனுகூலம் - ஜன்னலுக்கு வெளியே நடப்பவை உள்ளிருப்போருக்குத் தெரியும். ஆனால் வெளியே இருப்போருக்கு உள்ளே இருப்பவரைத் தெரியாது. இதனால் பலர் வீட்டு ஜன்னல்களுக்கும் இவற்றைப் பயன்படுத்துகிறார்கள்.

பாலியஸ்டர் சன் கன்ட்ரோல் ஃபிலிம்களைப் பொருத்துவதும் மிகச் சுலபம். பெரிய துணி பேல்களைப் போன்ற உருளைகளில் இவை கிடைக்கும். தேவையான அளவுக்குக் கத்திரித்து எடுத்து, பசைப் பாதுகாப்புக் கவசத்தை உரித்தெடுத்து விட்டு அப்படியே ஜன்னல்களில் ஒட்ட வேண்டியதுதான்! ஆனால் சுருக்கம் விழா மல் ஜாக்கிரதையாக ஒட்ட வேண்டும்.

''இந்தியாவில் கார்வாரே நிறுவனம் மட்டுமே இந்த ஃபிலிம்களைத் தயாரிக்கிறது. கச்சா பொருட்களும் தொழில் நுட்பமும் அமெரிக்க இறக்குமதி. 1983 முதல் இதன் விற்பனை வேகமாக அதிகரித்து வருகிறது'' என்கிறார் இந்த ஃபிலிம்களைத் தமிழ்நாட்டில் விநியோகிக்கும் உரிமை பெற்ற ராஜ் ஏஜென்ஸியின் சேர்மன் ஜி. அசோக்.

என்ன அனுகூலங்கள்?

''சன் கன்ட்ரோல் ஃபிலிம் ஒட்டப்பட்ட அறையில் சூரிய வெப்பத்தை 28 சதவிகிதம் மட்டுமே உணர முடியும். ஏ.ஸி. அறைகளின் ஜன்னல்களில் இந்த ஃபிலிம்கள் ஒட்டினால் விரைவில் 'கூல்' ஆகிவிடும். மின்சாரம் மிச்சப்படும். அல்ட்ரா வயலட் கதிர்களின் ஊடுருவலை 90 சதவிகிதம் கட்டுப்படுத்தும். இதனால் வீடுகளில் உபயோகிக்கும் விலையுயர்ந்த கர்டன்கள் தரை விரிப்புகள் போன்றவை விரைவில் பாழாகாமல் பாதுகாக்கப்படுகின்றன.. தப்பித் தவறி கண்ணாடி உடைந்தால் கூட, அதன் துண்டுகள் அறைக்குள் விழாமல் இந்த ஃபிலிம் தடுத்து விடும். இதில் எளிதில் கறை விழாது. கட்டடங்களுக்குக் கம்பீரத் தோற்றம் அளிக்கும்'' என அடுக்குகிறார் அசோக்.

''இவற்றின் விலை சராசரி மத்திய தரத்துக்கு எட்டாத உயரமோ...'' என்ற சந்தேகம் நம்முள் எழுகிறது.



காா்களுக்கும்...

''இல்லவே இல்லை! இரண்டு அல்லது மூன்று அறைகளின் ஜன்னல் களுக்கு இதைப் பொருத்த 600 முதல் 800 ரூபாய் வரைதான் ஆகும். ஆறேழு லட்சமோ, அதற்கு அதிகமோ கொடுத்து ஃபிளாட் வாங்கும் போது, இந்த நிரந்தர ஏற்பாட்டுக்காக இவ்வளவு செலவழிப்பது அதிகமில்லையே...'' என்கிறார் அசோக்.

– கீதா மோஹன்



காங்கிராட்ஸ், தொழில் கட்சியைச் சேர்ந்தவரானாலும் சபாநாயகரா வந்துட்டீங்க!
மேஜர்
இதுக்குத்தான் இந்த பிபிஸி, ஸ்டார் டி.வி. எல்லாம் இங்கே கூடாதுன்றது... நல்ல ஜனநாயக மரபு, அது இதுன்னு காட்டி நம்ம நாட்டையே கெடுத்துக் குட்டிச் சுவராக்கிடுவாங்க...!
அம்மா படம் என்ன அழகா அமைஞ்சிருக்கு!
முசிறி சம்பவம்
ஜெயலலிதா
பத்திரிகைக்காரங்க வேணுமின்னே என்னைப் படுமோசமா சித்திரிக்கிறாங்க...!
அங்கே பாருங்க, உங்க ஆளை விடவா?
அரங்கநாயகம்
கருணாநிதி முறைகேடுகள்னு ஒரு அத்தியாயம் இருக்கு... ஆஹா, பலே டேஸ்ட்!
சென்னை பல்கலைக் கழகம்
கருணாநிதி
அதுக்கும் முன்னாடி அ.தி.மு.க. காலத்துல சிமெண்ட் ஊழல்னு ஒரு அத்தியாயம் இருக்கு... அடடா, நினைச்சாலே வாயிலே ஜலம்



# கல்கி



1992
மே 10
மலர் : 50
இதழ் : 41
ஆங்கீரச
சித்திரை 28

## ஆட்டோ சங்கரும் 'அலாரம் பெல்'லும்!

ஆட்டோ சங்கர் தப்பிச் சென்றது எப்படி, என்ன தவறுகள் நடந்தன, யார் பொறுப்பு என்று ஆராய தனிநபர் கமிஷனாக நியமிக்கப்பட்டார் முந்நாள் தலைமை நீதிபதி மு.மு. இஸ்மாயில். இந்தக் கேள்விகளுக்குத் தமது அறிக்கையில் அவர் திட்டவட்டமாகப் பதில்களைக் கண்டுபிடித்துத் தருவதுடன், சிறைச்சாலைகளின் செயல்பாடு, மற்றும் பாதுகாப்புக் குறித்துப் பொதுப்படையான பல கருத்துக்களையும் கூறியிருக்கிறார்.

ஆட்டோ சங்கர் தப்பிச் சென்றதில் அவனுடைய சாமர்த்தியம் ஒரு புறமிருக்க, அவனைக் கண்காணித்து வந்த சிறை அதிகாரிகளின் மனப்பான்மைதான் அதிர்ச்சி அளிப்பதாக உள்ளது. ஆட்டோ சங்கர் நடத்திய விபசார விடுதியும் அங்கு பல ''பெரிய மனிதர்கள்'' கூட வந்து போன விவரங்களும், ஆட்டோ சங்கர் செய்த படுகொலைகளும் பத்திரிகைகளில் பிரபலமாக இடம் பெற்றதால் சிறை அதிகாரிகள், ஊழியர்களிடையே ஆட்டோ சங்கரிடம் ஒரு பிரமிப்பு ஏற்பட்டிருந்தது என்று எடுத்துக் காட்டுகிறார் இஸ்மாயில். அதனால் ஆட்டோ சங்கர் மற்ற கைதிகளைப் போலல்லாது அலட்டலாக நடந்து கொள்ள முடிந்தது. சிறை அதிகாரிகள், ஊழியர்களின் அசிரத்தையும் நேர்மையின்மையும் இதனுடன் சேர்ந்து கொள்ள, ஆட்டோ சங்கர் இந்தச் சூழ்நிலையைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு தப்பிக்க முடிந்தது.

ஆட்டோ சங்கருக்கு எதிராக அப்ருவராக மாறியிருந்த பாபு என்பவனைக் கொலை செய்தாக வேண்டும் என்று கறுவிக் கொண்டே ஆட்டோ சங்கர் தப்பியிருக்கிறான். இது தெரிந்தே, மத்திய சிறைச்சாலை சூப்பரின்டென்டெண்ட் செல்லத்துரையும் துணை ஜெயிலர் பாலகிருஷ்ணனும் வார்டர் கண்ணனும் அவனுக்கு உதவியிருக்கிறார்கள். ஆக, இம் மூவரும் ஆட்டோ சங்கர் தப்பிச் செல்ல மட்டும் உதவவில்லை; அவனுடைய ஒரு கொலை புரியும் நோக்கத்துக்கும் உடந்தையாக இருந்திருக்கிறார்கள்! (பாபு கொலை செய்யப்படு முன்னர் ஆட்டோ சங்கர் மறுபடி பிடிபட்டு விட்டான் என்பது வேறு விஷயம்.)

சிறைச்சாலை வளாகத்தைச் செப்பனிட்டுப் பலப்படுத்துவது, விளக்குகள் போடுவது முதல், புதிய புழல் ஜெயிலுக்குக் கைதிகளை இடம் மாற்றுவதுவரை பலப்பல அம்சங்களை நுணுகி ஆராய்ந்து அறிக்கையில் தமது சிபாரிசுகளைச் சமர்ப்பித்திருக்கிறார் இஸ்மாயில். இவற்றையெல்லாம் விட முக்கியமானது, சிறைக் காவலர்களின் மனம். சிறைக் காவலர்கள் வெறும் காவலாளிகள் மட்டும் அல்ல. அவர்கள் கைதிகளின் மனங்களுக்கும் காப்பாளர்கள். அவர்களை நல்வழிப்படுத்தி, கூடுமானவரை நல்ல குடிமக்களாக உருமாற்ற வேண்டியவர்கள். இவர்கள் சரியான நபர்களாக அமையாது போனால் யாரைத் திருத்த வேண்டுமோ அவர்களைத் தீர்த்துக் கட்டுவதுதான் நடக்கும்! இவ்வாறு சிறைச்சாலைகளில் நடக்கும் பல கொடுமைகள் (மூடி மறைக்கப் பார்த்தும் முடியாமல்) அவ்வப்போது வெளி உலகுக்கும் தெரியவருகின்றன.

போலீஸ் அதிகாரிகள் சிறைச்சாலை அதிகாரிகளாக நியமிக்கப்படுவதை இஸ்மாயில் ஆதரிக்கவில்லை. மன இயல் தெரிந்தவர்கள், ஒழுக்க சீலர்கள், கண்டிப்பானவர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் இப்பணிக்கு.

''எமெர்ஜன்ஸி காலத்தில் சிறைகளில் நடந்த கொடுமைகளையெல்லாம் விசாரித்து அறிக்கை தயாரித்தேன். அதனை அச்சடித்துப் பொதுமக்கள் பார்வைக்கு வைக்கக் கூட அரசுக்கு ஆர்வமில்லை'' என்று வருந்தியிருக்கிறார் இஸ்மாயில். ஜனநாயகத்தில் மக்களே எஜமானர்கள். அவர்களிடமிருந்து உண்மைகளை மறைப்பதால் பயனில்லை; அது தவறும் கூட. பகிரங்கப்படுத்துவதே குற்றங்கள் மறுபடி நிகழாது தவிர்க்க ஒரு வழியாகும்.

இஸ்மாயிலின் அறிக்கை, மத்திய அரசும் எல்லா மாநில அரசுகளும் கவனமுடன் படித்துப் பயன் பெறத் தக்கது. நாட்டிலுள்ள எல்லாச் சிறைச்சாலைகளுக்கும் பொருந்தக் கூடிய சீர்திருத்தங்களை உள்ளடக்கியது.

அலாரம் பெல் பொருத்தி விடுவதால் மட்டும் கைதிகள் தப்புவதைத் தடுத்து நிறுத்திவிட முடியாது; ஓர் அரசியல் பெண் கைதிக்கு ஃபேன் வசதி அளித்துக் கருணை காட்டி விட்டதால் மட்டும் ஆயிரக் கணக்கான சிறைக் கைதிகள் நல்லவர்களாகிவிடப் போவதில்லை; முதல்வரின் பிறந்த நாளையொட்டிச் சிலரை விடுவித்து விடுவதால் மட்டும் குற்றங்கள் குறைந்து விடப் போவதுமில்லை. இஸ்மாயில் அறிக்கையைத் தூசி படிய விடாமல் செயல்படுத்துவதே பலன் தரும்.



## ஜில் ஸ்பெஷல்



டாக்டர் கனகராஜ்

### வீட்டில் வளர்க்கும் செல்லப் பிராணிகளுக்குக் கோடைக் காலத்தில் 'ஸ்பெஷல் அடென்ஷன்' தேவை.

● நாய்களுக்கு வியர்க்காது. ஆனால் வெயில் காலத்தில் இவை நாக்கை அதிகம் தொங்க விடுவதைக் கவனிப்பீர்கள். நாக்கின் வழியே உஷ்ணத்தை இவை வெளியேற்றுகின்றன. வழக்கத்தை விட அதிகமான குடிநீர் பூனைகளுக்கும், நாய்களுக்கும் தரப்பட வேண்டும். க்ளுகோஸ், எலக்ட்ரோல் போன்றவற்றைக் கலந்து கொடுக்கலாம்.

● கிளி போன்ற பறவைகளுக்கும் அதிக நீர் தரப்பட வேண்டும். இவை நீர் உள்ள பாத்திரத்தின் விளிம்பில் அமர்ந்தபடிதான் அருந்தும். அசுத்தமாகும். இதனால் அடிக்கடி தண்ணீரை மாற்ற வேண்டும்.

● மீன் தொட்டிகளிலும் தண்ணீரை வழக்கத்தை விட ஓரிரு முறை கூடுதலாக மாற்ற வேண்டும். குளிர்ந்த கிணற்று நீரை உபயோகிப்பது நல்லது. தொட்டியை வெயில் படும் .இடத்தில் வைக்க வேண்டாம்.

● வெயில் காலத்தில் விலங்குகள் திட உணவு உட்கொள்வது குறையும். நல்ல டானிக் கொடுக்கலாம்.

● மனிதர்களைப் போலவே விலங்குகளுக்கும் Sun-Stroke வரக்கூடும் என்பதை மறவாதீர்கள். உயரமான கூரையுடன் காற்றோட்டமான இடத்தில் இருக்கச் செய்யுங்கள். அல்லது மர நிழலில்.

● பார்வோ வைரஸ் கிருமிகளும் உண்ணிகளும் அதிகமாகத் தாக்குவதும் இக்காலத்தில்தான். பார்வோ வைரஸின் தாக்குதலால் மரணம் கூட நேரலாம். இதற்கு எதிராகத் தடுப்பூசி போட வேண்டும். உண்ணிகள் வராமல் காக்க, நாய்களைத் தினமும் இருமுறை குளிப்பாட்டலாம்.

● பயங்கர ரேபீஸ் நோய் பூனை, நாய் இரண்டையுமே தாக்கக்கூடியது வெயில் காலத்தில்தான். Raksha Rab தடுப் பூசியைக் கண்டிப்பாக ஒவ்வொரு கோடையிலும் போட வேண்டும்.

● பறவைகளுக்கும் ஜுரம் வயிற்றுப் போக்கு போன்றவை ஏற்பட வாய்ப்பு உண்டு. இவற்றை Raniket என்ற கொடிய நோய் தாக்கக் கூடும். இதற்கு எதிரான தடுப்பூசி அரசு கால்நடை மருத்துவமனைகளில் போடப்படும்.




தகவல் : டாக்டர் ஜஸ்வந்த் எட்வின் கனகராஜ்
தொகுப்பு : வைதேகி தேசிகன்



நீங்க நேத்து ஆட்டத்தைப் பார்க்கலியா... இதுதான் அதோட க்ளைமாக்ஸ்!
'அட, பாண்ட் போட மறந்தாத்தான என்ன!
பார்க்கறவங்க நல்லா ரசிச்சாங்களே!'
VIP
Brat
7 முதல் 12 வயதுள்ள
குட்டி வீரர்களுக்கு.
Avenues HH 1267 92



# ஜில்லென்று சில காட்சிகள்









அட்டை வண்ணப்படம் : யோகா
படத்தில் : ல்லிதா பாலசுப்ரமண்யம்,
குழந்தை பவித்ரா

# நம்புவோம்-வெற்றி பெறுவோம்

கங்கையாற்றில் ஒரு புண்ய காலத்தில் ஆயிரக்கணக்கானபேர் நீராடிக் கொண்டிருந்த நேரம். கைலாயத்தில் பக்கம் இருந்த பரமேச்வரனைப் பார்த்து பார்வதி தேவி கேட்டாள். "சுவாமி... இத்தனை பேர் பாவமும் இன்றோடு போய் விட்டதா? இவர்கள் இனி பாவிகள் அல்லரா? அத்தனை பேரும் கயிலாயம் வருவார்களா சுவாமி? அப்படியானால் இதற்குமுன் இப்படி குளித்தவர்கள் இங்கு வந்து சேரக் கயிலையில் கூட்டம் நெரிய வேண்டுமே?"

பார்வதி கேட்டு நிறுத்தியதும் சிவபெருமான் பொருள் பொதிந்த புன்னகை உதிர்த்தார். உமையம்மையின் ஓங்காரச் செவிகளில் ஏதோ ரகசியம் சொன்னார். அம்பிகை கலகல எனச் சிரித்தார். அடுத்த நொடி கயிலையில் இருவரையும் காணவில்லை!

ஆனால் கங்கைக் கரையில் பழுத்த சுமங்கிலி நிற்கிறாள். வெள்ளத்தின் வேகத்தில் ஒரு சுழலின் மையத்தில் கிழவர் ஒருவர் சிக்கித் திணறுகிறார். அந்தப் பெருமாட்டி அலறினாள்.... "ஐயா... என் கணவரை யாராவது காப்பாற்றுங்கள். அவருக்கு நீச்சல் தெரியாது" ஐயா.... அவரைக் காப்பாற்றுங்கள். உடல் வலிமை உடையவர்கள், படித்தவர்கள், பாவ புண்ய சர்ச்சையில் இருந்த பண்டிதர்கள், பக்த மகாஜனங்கள், கிழவர்கள் என்று பலர் உதவிக்கு ஓடி வந்தனர்.

நீரில் குதிக்கப் போனவர்களைப் பார்த்துக் கிழவி எச்சரித்தாள். "ஐயா... பாவிகள் அவரைத் தொடக்கூடாது. தொட்டால் என் கணவர், தொட்டவர் இருவர் உயிரும் போய் விடும். அவர் இல்லையேல் நானும் இறந்து போவேன். பாவமே இல்லாதவர்கள் அவரைக் காப்பாற்றுங்கள்" என்றாள்.

முன்னால் ஓடிவந்த கூட்டம் பின்னால் சிதறியது. பாவமே இல்லாதவர் யார் இருக்க முடியும்? பாவத்தோடு கிழவரைத் தொட்டு சாவதா? பல சாவுகளை ஏற்படுத்துவதா? கிழவி கதறிக் கதறி அழுதும் உதவ ஆள் இல்லை. திடீர் என்று, படிப்பறிவில்லாத பாமர வாலிபன், நீரில் பாய்ந்து கிழவரை மீட்டு, கரையில் கொண்டு வந்து போட்டான். பலரது பார்வையில் ஆச்சரியம் படம் எழுதியது. பண்டிதர் ஒருவர் படபடத்தார். "தம்பி... நீ பாவமே செய்ததில்லையா?" கர கரத்த குரலில் அவன் பேசினான். "நிறைய... நிறைய... பாவங்கள் செய்திருக்கிறேன்."

"பாவிகள் கிழவரைத் தொடக்கூடாது என்றாளே கிழவி. அதனால்தானே நாங்கள் தயங்கினோம். அவள் சொன்னது பொய்யா?" பண்டிதர் கேள்வி கேட்டார்.

"ஐயா... நான் பாவிதான். என்றாலும் கிழவி கதறிய போது என்னால் தாங்க முடியவில்லை. அதுமட்டுமல்ல... கங்கையில் குளித்தால், இந்தப் புனிதநீர் பட்டால் பாவங்கள் யாவும் போய் விடும் என்று கொஞ்சம் முன்னால் நீங்கள் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டுக் கொண்டிருந்தேன். நான் பாவங்கள் செய்திருந்தாலும் கங்கையில் இறங்கியதும் அவை போய் விட்டனவே. அதன் பிறகு அவரைத் தொட்டாலும் எனக்கும் அவருக்கும் எதுவும் ஆகாது என்று தோன்றியது. அதனால் குதித்துக் காப்பாற்றினேன்" என்றான். அடுத்த நொடி கிழவனையும் கிழவியையும் காணவில்லை.

கயிலை மலை முழுதும் அவர்கள் கலகலத்த சிரிப்பு எதிரொலித்தது. "பார்த்தாயா தேவி... கங்கையில் குளித்தால் பாவம் போகும் என்று பலபேர் பேசிக்கொண்டாலும் நம்பினவன் லட்சத்தில் ஒருவன்தான். இப்போது தெரிகிறதா? கைலாயத்தில் கூட்டம் எப்படி குறைவாக இருக்கிறது என்று!" புன்சிரிப்போடு பேசி முடித்தார் சிவபெருமான்.

நம்பிக்கைகள் முழுமையாக இருக்க வேண்டும். அரை குறை நம்பிக்கைகள் ஆபத்தானவை. ராம நாமத்தை அனுமன் நம்பிய அளவு சுக்ரீவன் நம்பவில்லை. அனுமன் பெற்ற நிலையைச் சுக்ரீவனால் பக்தி உலகில் அடைய முடியவில்லை.

சசிசிவம்

மகாமகக் குளத்தில் மற்றவரைக் குளிக்கவிடாமல் குளித்து விட்டால் புண்ணியமா? இல்லை. சர்வலோக நாயகனை, சர்வேஸ்வரனைத் தியானம் பண்ணிக் கொண்டு வேறு சிந்தை இன்றி சகல நதிகளும் புண்ய தீர்த்தங்களும் இந்தக் குளத்தில் இந்த வேளையில் இருப்பது சத்யம் என்ற தீர்மானத்தோடு குளித்தவர்கள் பாக்யவான்கள். அந்த உணர்வு - அனுபவம் - பாவனை இல்லாமல் குளத்தில் நின்றிருந்தால் குளோரின் எரிச்சல்தான் மிச்சம்! திருநாவுக்கரசர் என்ற ஞானி இதைத் தீர் மானம் போட்டு அறிவிக்கிறார். ''கங்கை ஆடில் என் காவிரி ஆடில் என்'' என்றார். ''நீ எங்கே குளித்தால் என்ன? பொங்கு தண்கடல் புகுந்து ஆடினால்தான் என்ன? எங்கும் இறைவன் என்ற அனுபவம் வர வில்லை என்றால் உன் வழிபாடு வேஷம்'' என்று முழங்கினார்.

தண்ணீர் உடல் அழுக்கைத்தானே நீக்கும். அது எப்படி உள்ள அழுக்கை நீக்க முடியும் என்ற கேள்விக்கு வள்ளுவர் ''புறந் தூய்மை நீரான் அமையும். அகம் தூய்மை வாய்மையால் காணப்படும்'' என்று நீராட்டம் பாவ நீக்கம் தொடர்பைக் கோடு போட்டுக் காட்டினார். ''தீதுநீங்கக் கடலா டியும் மாகபோகப் புனல்படிந்தும்'' என்பது பட்டினப்பாலை கடவுளையே நீராக எண்ணி ''நீர்வண்ணன்'' என்பது வைணவர் வாழ்வியல்.

தண்ணீருக்கும் கடவுளுக்கும் நிறை யவே ஒற்றுமை உண்டு. இறைவனுக்கும் சரி, தண்ணீருக்கும் சரி வடிவம் இதுதான் என்று சொல்ல முடியாது. எந்த வடிவத்தில் வைக்கிறோமோ அந்த வடிவம் பெறும். மேல் இருந்து கீழ்நோக்கி இறங்கும்







(பள்ளமடை) இயல்பு-கருணை- பொதுவானது. குளிர்ந்திருப்பது பொதுக்குணம். அழுக்கை நீக்குவது பொதுப்பணி. இன்னும் நிறைய சொல்லலாம். அதனால்தான் பெருமாள் கோவிலில் 'தீர்த்தமே' பிரசாதம் ஆனது. 'ஆர்த்த பிறவித் துயர் கெட ஆர்த்தாடும் தீர்த்தன்' என்று சிவபெருமானைத் தீர்த்தன் என்கிறார் மாணிக்கவாசகர்.

அதனால்தான் கும்பாபிஷேக காலத்தில் கும்பத்தில் உள்ள நீரில் இறையருள் சேகரிக்கப்படுகிறது. கும்பநீர்தான் கடவுள் அம்சமாகவே கருதப்படுகிறது. வீட்டில் வழிபாடுகள் - புண்யாகவசனம். குறைநீக்கும் சடங்குகள் செய்யும் போது கும்பம் வைத்து நீரில் இறையாற்றலைத் தேக்கி வீட்டில் தெளித்து நீராடி மனமாசுகளை நீக்கி விடுகிறோம். மகாமகம் இதன் பிரமாண்டமான விரிவாக்கம். வீட்டில கும்பத்தில் செய்வதை நாட்டில் குளத்தில் செய்கிறோம். நாட்டுக்கே அந்த ஊர் கும்பம். அதனால்தான் அது கும்பகோணம்!

ஒரு புரோகிதர் அல்லது ஆசார்யர் ஒரு கும்பத்தில் நீர் வைத்து மாவிலை, தர்ப்பை, தேங்காய், பூ வைத்து கும்பநீரில் புண்ய நதிகளை ஆவாகனம் செய்கிறார். ஆகர்ஷணம் செய்கிறார். அந்தக் குருவின் சங்கல்பத்தால் கும்பத்தில் புண்ய நதிகள் சேர்ந்து அழுக்கை (புறம்+அகம்) நீக்கி விடுகின்றன. அது போல் உலக குருவாகிய வியாழ பகவான், யாக அக்னியாகச் சூர்யனைப் பார்த்து, கும்பராசியைச் சங்கல்பத்தோடு நோக்கினால் - கும்பகோணத்தில் புண்ய நதிகள் ஆவாகனம் ஆகிவிடுகிறது! வீட்டில் ஒரு குரு செய்வதைத் தேவகுரு நாட்டில் செய்வது மகாமகம். அப்போது குளிக்கும்போது குளம் புண்ய கும்பம் என்ற பாவனையோடு நீராடியவர்கள் பாவம் நீங்கிய பாக்கியசாலிகள். மற்றவர்கள் பன்னிரண்டு வருடம் காத்திருக்க....!

'குளத்தில் கங்கை வருமா?' என்று கேட்டுக் கொண்டே இருந்தால் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டியதுதான். நம்பிக்கை இருந்தால் கங்கை நம்வீட்டுக் குழாயிலும் வரும். தோட்டத்திலும் வரும். ''கங்காஸ்நானம் ஆச்சா?'' என்ற கேள்வியே இந்த நம்பிக்கையின் வெளிப்பாடுதான்.

ஒருவர் காசி ராமேஸ்வரம் யாத்திரை போனார். ராமேஸ்வரத்தில் இறங்கியதும் செருப்பு அறுந்து போய், தைக்க வேண்டி வந்தது. காசு கொடுக்க பர்ஸைத் திறந்ததும் 'ஆ' என்று அலறினார். 'காசுதான் காண இல்லையோ' என்று செருப்பு தைப்பவர் கேலி பேசினார். ''இல்லை ஐ ய ா... இல்லை... புனித கங்கையில் போடுவதற்கு என்று என் பாட்டி ஒரு தங்கவளையல் கொடுத்தாள். கங்கையில் குளித்த போது போடாமல் மறந்து வந்து விட்டேன். இந்த வாய்ப்பு இனி எப்போது வரும். எப்போது போய் எப்படிப் போடப் போகிறேன் என்று கவலையாக இருக்கிறது'' என்றார்.

''அந்த வளையலைக் கொடுங்கள்'' என்றார் செருப்பு தைப்பவர். வாங்கி, தோல் நனைப்பதற்காகத் தாம் வைத்திருக்கும் தகர டப்பாவில் உள்ள தண்ணீருக்கு மேலே பிடித்தார். ''ஹே... கங்கையே... இந்தத் தகரக் குவளையில் நீ இருப்பது சத்தியம் என்றால் இந்த வளையலை அணிந்து கொள்'' என்றார். தகரக் குவளையின் தண்ணீரில் இருந்து ஒரு மெல்லிய கை நீண்டது. வளையலை அணிந்து கொண்டு தண்ணீரில் மின்னி மறைந்தது.

நம்பிக்கை இருந்தால் கங்கை எங்குதான் வராது?

## அமெரிக்காவில் ஆராய்ச்சி; சிங்கப்பூரில் தடை!



ஐந்து வருட ஆராய்ச்சிக்குப் பிறகு அமெரிக் காவில் ஒரு புதுரக சூயிங்கம் கண்டுபிடித் திருக்கிறார்கள். சாதாரணமாக ஐந்து நிமிடங்களில் சுவை, மணம் இழக்கும் சூயிங்கம் புதிய கண்டு பிடிப்பின் காரணமாகப் பத்து மணி நேரம் சுவை இழக்காதிருக்கிறது! நிற்க, தெரியுமோ, சிங்கப் பூரில் சூயிங்-கம்மிற்குத் தடைவிதித்திருக்கிறது அரசு!

- ஆர். ஜானகி

# அரைமணி நேரம் செலவிடத் தயாரா?

**00-30**

**ஆம்... உங்களது முன்னேற்றத்திற்காக, தினசரி அரைமணி நேரம் செலவிடத் தயாராக இருக்கிறீர்களா? அப்படியானால் மேற்கொண்டு படியுங்கள்!...**

★ **வா**ழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற விருப்பம் உடையவரா நீங்கள்?

★ ஆங்கில மொழியில் போதிய புலமையின்மை உங்களது முன்னேற்றத்திற்கு ஒரு தடையாக இருக்கிறதா?

★ பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் ஆங்கிலத்தில் சரளமாகப் பேசும் ஆற்றல் பெற முடியவில்லையே என்று வருத்தப்படுகிறீர்களா?

★ கவலையை விடுங்கள்... நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற்றத்தை அடைய உங்களது ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் ஒதுக்கினால் போதும்!

ஆம்- இந்த அரைமணி நேரத்தில் நீங்கள் தினசரி மேற்கொள்ள வேண்டிய பயிற்சியினை மிகவும் எளிய முறையில் சொல்லித் தந்து, நீங்கள் தயக்கமின்றி ஆங்கிலத்தில் உரையாட தபால் மூலம் மிகச் சிறந்த முறையில் பயிற்சி அளிக்கிறோம்.

எனவே, ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும், இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் இப்பயிற்சியின் மூலம் நிச்சயம் நிறைவேறும்.

என்ன? பயிற்சிக்காக தினசரி அரை மணி நேரம் செலவிடத் தீர்மானித்து விட்டீர்களா?

அப்படியானால், உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சியாக ஒரு ஐந்து நிமிடம் செலவு செய்து ஒரு போஸ்ட் கார்டில் "நான் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்" என்று எழுதி, .

---

**விவேகானந்தா கல்வி நிலையம்,**
**9, நடேசன் தெரு, தி.நகர்,**
**சென்னை 600 017.**

---

என்ற முகவரிக்கு இன்றே அனுப்புங்கள் பயிற்சி பற்றிய விவரங்களை உங்களுக்கு உடனே அனுப்பி வைக்கிறோம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

# 'மதிப்பிற்குரிய அம்மா...'

**வி**வேகானந்த புரம் ஸ்டாப்பிங்!

கனத்த முனகலுடன் பஸ் நிற்க, பொலபொல வென்று பயணிகளின் உதிரல்.

விவேக் வழி விடுவதற்காக இறங்கி நின்று கொண்டான். அது மட்டுமே காரணமில்லை. முன் வாயில் வழியே 'அவள்' இறங்குவதைத் தரிசிக்கவும் தான்.

இமைக்காத அவனது பார்வையில் அந்த இளம் நீல தேவதையின் தரிசனம்! சர சரவென்று ஒரு சிலிர்ப்பின் ஊடுருவல் நரம்புகளில்.

தன்னை இத்தனை ஆர்வமாய் ஒருவன் நேசித்துப் பார்க்கிறான் என்கிற பிரக்ஞையே இல்லாதவள் போன்று, தோளில் லெதர் பேகும், கை மடிப்பில் கனத்த டைரியுமாய் பஸ்ஸை விட்டிறங்கி, விவேகானந்தபுரம் தோரண வாயிலை நோக்கி நடக்கலானாள்.

அவள் இறங்கிய வேகத்தில் டைரி திறந்து, அதிலிருந்து ஒரு சிறிய அட்டை விழுந்தது.

அதைக் கவனிக்காத அவள், போய்க் கொண்டேயிருக்க, அதைக் கவனித்த விவேக் ஓடிப்போய் அதனை எடுக்கவும், பஸ் கிளம்பிவிட்டது. இப்போது கூப்பிட்டுத் தருவதற்கு அவகாசம் இல்லை. அப்புறம் காலேஜுக்கு லேட்டாகி விடும். சமீபத்தில் அப்பாயின்ட்மெண்ட் ஆனவன். லேட்டாகப் போதல், லீவ் எடுத்தல் எதுவும் பிடிக்காத கண்டிப்பான பிரின்ஸிபால்! எனவே பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று கணப் பொழுதில் முடிவுக்கு வந்த விவேக், கிளம்பிவிட்ட பஸ்ஸில் தாவி ஏறினான்.

அந்த அட்டையில் ஒரு புகைப்படம் ஒட்டப்பட்டிருப்பதைக் கண்டான். அவளின் அம்மாவாக இருக்குமோ என்கிற யோசனையுடன், கைப் பையினுள் வைத்தான்.

உள்ளே ஒரு சந்தோஷப் பிறிடல்.

அவளிடம் பேசுவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைத்திருக்கிறதே!

"**தே**ங்க்யூ மிஸ்டர்....."

"விவேக். ஐ ஆம் விவேக்....."

"ஓ! நைஸ் நேம்! ஐ ஆம் லலிதா...."

"ஓ! லவ்லி நேம்! ஐ லைக் இட் லோமச்!" மென்மையாகச் சிரித்தாள் லலிதா.

"பெயரை மட்டுமில்லே...." என்றவன் குறும்பு தவழ அவளை நோக்கினான். அவளின் முகம் மலரும் என்று நம்பினான். ஆனால் இல்லை.

இவன் கூறியதன் பொருளை உணர்ந்த பின்னும் கூட அதன் எதிரொலிப்பாய் எவ்வித உணர்வு வெளிப்பாடும் இல்லை.

இவனிடம் உற்சாகம் வடியத்துவங்கியது. எனினும் சற்றே நம்பிக்கை வைத்து,

"பைதபை, இந்த போட்டோவுல இருக்கிறது யார்ன்னு தெரிஞ்சுக்கலாமா? உங்க அம்மாவா?" என்று கேட்டான்.

சட்டென்று இதற்குப் பதில் கூறி விடாமல், சற்று அதிகமாகவே நிதானம் காட்டிய லலிதா,

"அம்மா...., ஓ.... அம்மாதான்! என்னோட மதிப்பிற்குரிய அம்மா!" என்றாள்.

அவள் காட்டிய தயக்கமும், மதிப்பிற்குரிய அம்மா என்று அடைமொழி தந்து கூறியதும் விவேக்கைச் சிந்திக்கப் பண்ணின.

பெற்ற தாயைக் குறிப்பிடுவதானால் தயக்கமோ அடைமொழிகளோ தேவையில்லையே. அப்படியானால் இந்த மதிப்பிற்குரிய அம்மா யார்? லலிதாவுக்கு என்ன வகை உறவு? கேட்க முடியுமா? அவளே சொல்வாள் என்று எண்ணிக் கொண்டே அவளைப் பார்த்தான்.

அவளோ, 'வரட்டுமா?' என்று விடை பெற்றுப் போகிற பாவமுடன் நின்றிருந்தாள்.

எனினும் விட்டு விடுவதில் விவேக்கிற்கு விருப்பம் இல்லை. இன்னும் கொஞ்சம் பேசியாவது மனத்தைத் திறந்து காட்டி விட வேண்டும் என்றே முனைப்பாக எண்ணலானான்.

"மிஸ் லலிதா, எனக்கு வாரியூர்தான் சொந்தக் கிராமம். அகஸ்தீஸ்வரம் காலேஜ்ல லெக்சரராய் இருக்கேன். உங்களைப் பத்தியும் கொஞ்சம் தெரிஞ்சுக்க ஆசைப்படுறேன். இஃப் யூ டோண்ட் மைண்ட்....."

"நத்திங், ஐ மீன்...., என்னைப் பத்திச் சொல்லிக்கிற மாதிரி எதுவுமே கிடையாது" என்றாள் 'நறுக்'காக.

உமா கல்யாணி

எந்தப் பெண்தான் முதல் முயற்சியிலேயே சாதகமான பதிலைத் தந்துவிடுவாள்? எதிராளியின் மனத்தை ஆழம் பார்ப்பதற்காகக் கூடத் தங்களின் மனங்களுக்குப் பெண்கள் உறை போட்டுக் கொள்வது உண்டல்லவா....!

''இதோ பாருங்க மிஸ் லலிதா, சொல்லிக்கிறதுக்கு எதுவுமே கெடையா துன்னு யாரும் சொல்லிட முடியாது. ஒவ் வொரு மனுஷ பிறவிக்கும் வரலாறு உண்டு. பெரிசாவோ இல்ல சிறிசாவோ, அழகாவோ..... இல்ல அபத்தமாவோ நிச்சயம் உண்டு. உங்களுடையதும் இதுல ஒண்ணு தான். எதுவானாலும் நீங்க சொல்லலாம்....''

''எதுக்கு....?''

'பட்'டென்று கேட்டவுடன், 'தக்' கென்று அதிர்ந்து நிஜறிந்தான் போனான். அப்புறம் சமாளிக்கிற விதமாய்ச் சிரித்துக் கொண்டு.

''மிஸ் லலிதா, உங்களை நான் முதல் முதலாய்ப் பார்த்தப்பவே என் மனசுல ஓர் அபிப்ராயம் உருவாயிடுச்சு. தினமும் உங்களை பஸ்ல பார்க்கப் பார்க்க உங்க பேர்ல நேசம் உருவாயிடுச்சு.'' என்று பரவசமாய், உணர்ச்சிகள் ததும்பும் குரலில் நெகிழ்வோடு சொன்னான்.

அவன் பாதிக்கப்பட்டதை முதல் முறையாக அவள் முகம் உணர்ந்தது.

''நான் சொல்றதுல நம்பிக்கை வரலியா மிஸ் லலிதா?''

''வருது. ஆனா..., நீங்க என்னுறது நடக்கும்னு எனக்குத் தோணலியே.''

''ஏன்?....''

''ஓர் அநாதையைக் கல்யாணம் பண்ணிக்கிற தைரியம் உங்களுக்கு இருக்கா?''

''லலிதா!''

''ஓர் அநாதையை மருமகளாய் ஏத்துக்கிற பக்குவம் உங்க பெ[illegible] இருக்கா?''



''லலிதா!''

''மிஸ்டர் விவேக், இதுல சிக்கல் இருக்கு. ஒரு வேளை உங்க மனசு ஏத்துக்குமாய் இருக்கும். ஆனா பெரியவங்களாலே முடியாது.''

''அனாதைன்னா....?''

''அனாதைதான்! அனாதைன்னா தெரியாது? நோ பேரன்ட்ஸ்...! நோ ரிலேடிவ்ஸ்...!''

கண்களில் மினுமினுப்பு.

விவேக் சங்கடமாய் உணரலானான்.

''நீங்க பத்திரமாய் எடுத்துட்டு வந்து தந்தீங்களே போட்டோ, அதுல இருக்கிற அம்மா நிர்மாணிச்ச குருகுல ஆச்ரமத்துல தான் இப்ப நான் இருக்கேன். என்னைப் பெத்தவங்க யாருன்னே எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிஞ்சதெல்லாம் இந்த அம்மாவும், இப்ப குருகுலத்தை நிர்வாகம் பண்ற அண்ணாவும்தான். உங்களைப் பார்க்கிறப்பவே தெரியுது மிகப் பெரிய இடத்தைச் சேர்ந்தவர்னு. உங்க வீட்ல சம்மதிக்கவே மாட்டாங்க. அதனாலே, இந்த நிமிஷமே என்னை மறந்துட்டு நீங்க போகலாம். அதான் பெட்டர்'' என்றாள் லலிதா மிகவும் நிதானமாகவும் தெளிவாகவும்.

அம்மா அவன் முன் தோன்றினாள். கழுத்து நிறைய நகைகள் போட்டுக் கொண்டிருக்கிற அம்மா.

இப்போது அவனது பார்வை லலிதாவின் கழுத்தை ஆய்ந்தது. ஒரு கருமணிச் சரம் மட்டும்தான்! இவளை...., இவளை...., அம்மா மருமகளாய் ஏற்பதென்பது நடக்கிற காரியமா?

''எனக்கு டயமாச்சு மிஸ்டர் விவேக். லேட்டாய் நுழைய எங்க ஆசிரம விதிகள் இடம்தராது. ஆறுமணி பூஜைக்கு நான் அங்கே இருந்தாகணும். வர்றேன்'' என்றவள் புன்னகை முகத்தோடு புறப்பட்டு விட்டாள்.

''நினைச்சேன்டா. இப்படி உன்கிட்டே ஏதாச்சும் இருக்கும்னு நினைச்சேன்டா. சரி, எங்களுக்கு அலைச்சல் மிச்சம். பொண்ணு யாருன்னு சொல்லு.''

''நேத்து ராத்திரி என் வீட்டுக்கு வந்த திருடனுக்குக் குறும்பு ஜாஸ்தி.''

''எப்படிச் சொல்றே?''

''திருடினதும் இல்லாம, என் பொண்டாட்டி வச்சிருந்த மிச்ச மீதியத் தின்னுட்டு, 'எப்படி இத்தம்மா கூடக் குடித்தனம் நடத்துறீங்க?'ன்னு குறிப்பு எழுதி வச்சுட்டுப் போயிருக்கான்.''

– ஆரூர் ரோஜா



குறும்பும் சிரிப்புமாய்க் கேட்டாள் பூரணி.

இப்போது நிறையவே தயங்கினான் விவேக்.

''டேய் விவேக், நான் இந்த வீட்டுக்கு மருமகளாய் வர்றப்ப நூறு சவரன் நகைகளும், ஒரு லட்சம் ரொக்கமும், வெள்ளி, பித்தளை, செம்பு, எவர்சில்வர்னு ரகம் ரகமாய்ப் பாத்திரங்களும் கொண்டுட்டு வந்தவ. எனக்கு வர்ற மருமகளும் இது மாதிரியே வரணும்னு ஆசைப்படுறேன். நீ பார்த்து வச்சிருக்கிற பொண்ணு கௌரவமான பணக்கார வீட்டுப் பொண்ணு தானேடா?'' என்று நிதானமாகக் கேட்டாள் பூரணி.

''அம்மா பணத்தை நான் பிரதானமா எண்ணலே....''

''நாங்க எண்ணுறோம்டா. உன்னைப் பெத்து, வளர்த்துப் படிக்க வச்சு, உத்யோகம் வாங்கி வச்சு, சமூக அந்தஸ்தோட உன்னை உலவவிட்ருக்கோம்னா, அதுக்குப் பின் பலம் பணம்தானேடா? நம்ப கையில பணம் இல்லாம இது முடியுமா? பணம் பிரதானம் இல்லேன்னு சுலபமாச் சொல்றியே!''

''இதோ பாரும்மா, இந்தம்மா பணமில்லாமலும் சாதிக்க முடியும்னு சொல்றாங்களே!'' என்ற விவேக், லலிதாவிடமிருந்து வாங்கி வந்த குருகுலத் தலைவியின் படத்தை அம்மாவிடம் காண்பித்தான்.

''யாருடா இவங்க? பணமில்லாம காரியம் பண்ற வித்தை தெரிஞ்சவங்களா?''

''இவங்கதான் உனக்கு வரப்போற சம்பந்தியம்மா. நீ கேட்கிற வித்தையைப் பண்றவங்க!''

முகம் சுளித்தாள் பூரணி.

''ஏம்மா முகம் சுளிக்கிறே? இவங்க லலிதாவுக்கு மட்டும் அம்மா இல்லே. அவளைப் போல நிறைய ஆதரவு அற்றவங்களுக்கெல்லாம் அம்மாவா இருக்கிறவங்க. இப்ப நீ பெரிசாப் பெருமை பேசினியே என்னைச் சமூகத்துல உலவ விடுறதுக்காக என்னென்னவோ செய்தோம்னு பெரிசு பெரிசாய் லிஸ்ட் எல்லாம் போட்டு... அதைப் போல பல மடங்கு, பலபேருக்குச் செய்திட்டிருக்கிறவங்க. அதுவும் அவங்க பெறாத பிள்ளைங்களுக்காக! பெத்த பிள்ளைங்களுக்குப் பண்றது இயற்கைம்மா. ஆனா.... இதுக்குப் பரந்த மனசு வேணும்....''

இன்னும் எரிச்சல் பார்வையுடனேயே பூரணி இருந்தாள்.

''அம்மா, இவங்க நடத்துற ஆசிரமத்துலதான் லலிதா வளர்ந்தவ...''

''ஆக..., ஓர் அனாதையை எம் மருமகளாக்க ரெடியாயிட்டே! வசதியானவன்னு

பார்த்து அந்தப் பொண்ணு உன்னை வளைச்சிட்டா போலிருக்கு......''

''தோ. இப்ப கூட லலிதா சொன்னது என்னன்னு தெரியுமா? 'உங்களுக்கு ஏத்த மாதிரி அந்தஸ்தான இடத்தைப் பார்த்துப் போங்க'ன்னுதான்....''

''புத்திசாலிப் பொண்ணு. உலக நடப் புப் புரிஞ்சவ.''

''ஆனா...., இப்படிச் சொன்னதா லேயே எனக்கு அவபேர்ல இன்னமும் பிடிப்பு வந்துருச்சு. அபிமானம் கூடிப் போயிருச்சு.''

'உம்' மென்று முகம் காட்டினாள் பூரணி.

''அம்மா, இந்தப் போட்டோவுல இருக்காங்களே அந்த ஆசிரமத் தலைவி, முத முதலா ஆசிரமத்தை ஆரம்பிக்கிறப்ப நாலு குழந்தைங்களோடதான் ஆரம்பிச் சிருக்காங்க. அவங்கப்பா அவங்களுக்குப் பண்ணிப் போட்ட நகைகளை ஒன் னொண்ணாய் வித்து வித்து அதுங்களைப் பராமரிச்சிருக்காங்க.நகைங்க போனதும் வெளில உதவி கேட்டுப் போனப்ப, அவங் களோட காருண்யம் நிறைஞ்ச மனசையும் செயலையும் பாத்துட்டு வாலண்டியராவே நிறையப் பேர் உதவி பண்ணத் துவங்கிட் டாங்க. இன்னிக்கு அது ஆலமரமாய் வளர்ந்து நிற்கிறதும்மா. அந்த நிழல்ல வளர்ற ஒவ்வொரு அனாதை குழந் தையையும் பெற்ற பிள்ளையா பாவிச்சு, எதிர் காலத்தை அமைக்கப் பாடுபடு றாங்க....''

மௌனமாய் இருந்தாள் பூரணி.

''யார் யார் பெத்த பிள்ளைங்களுக் காகவோ தன்னோட சொந்த நகை களையே கழற்றி வித்தாங்களே, அந்தப் பெருந் தன்மையைக் கொஞ்சம் எண்ணிப் பார்க்க ணும்மா நீ! நமக்கே உறவாய் வரப் போகிற, நம்மோட சகல காரியங்களி லேயும் பங்கேற்கப் போகிற ஒருத்தி......, நகை சுமந்து, பணம் சுமந்து, சீர்சுமந்து வர ணும்ன்னு எண்ணுறது பெரிய சுயநலம் இல்லியா?

விவேக் நிதானமாய், நம்பிக்கையோடு கேட்டான்.

மனமாற்றத்துக்கு அறிகுறியாகப் பூரணி அவன் கைகளைப் பற்றியபோது பெருமிதத்தில் அவள் கண்கள் கலங்கி யிருந்தன.

அம்மாவுக்குள் ஒளிந்து கிடந்த ஒரு சிறந்த பரிமாணம் வெளிப்பட்டதை எண்ணி இரட்டிப்பாய்ச் சந்தோஷப் பட்டான் விவேக்.





பொன்விழா கவிதைப் போட்டி

# எங்கள் பாரத நாடு என்று...

இந்தியாவில் ஜனநாயகம்
வளரவில்லை என்று
எவன் சொன்னது!
முன்னாள் பிரதமர்
முன்னாள் ஐ. ஏ. எஸ்.
முன்னாள் நடிகர்கள்
இந்த வரிசையில்
முன்னாள் கொள்ளைக்காரர்களும்
தேர்தல் களத்தில்!

இந்தியப் பண்பாடு அழிந்து விட்டது
என்று
எவன் சொன்னது!
அசாமில் உல்பா
பஞ்சாபில் காலிஸ்த்தான்
காஷ்மீரத்தில் விடுதலை இயக்கம்
ஆந்திரத்தில் நக்ஸலைட்
இருந்தாலும் என்ன
எல்லோர் கையிலும் ஏ. கே. 47
வேற்றுமையில் ஒற்றுமை
காண்பது என்பது இதுதானோ!

இந்தியாவில் விஞ்ஞானம்
வளரவில்லை என்று
எவன் சொன்னது!
மகாத்மாவைக் கொன்றது
சாதாரண தோட்டா
அன்னை இந்திராவைக் கொன்றது
இயந்திரத் தோட்டா
ராஜீவைக் கொன்றதோ
ஆர். டி. எக்ஸ்!

இந்தியாவில் சமத்துவம் இல்லை
என்று
எவன் சொன்னது!
இந்தியாவின் பெரும்பகுதி
ஓலைக் குடிசைக்கும்
ஒட்டுப் போட்ட சட்டைக்கும்
ஊசிப்போன குழம்புக்கும் தானே
சொந்தமாக இருக்கிறது
இதில் சமத்துவம் இல்லை என்று
யார் சொன்னது!



லதா சங்கரலிங்கம்

# சிவகாமியின் சபதம்

நாலாம் பாகம்

## சிதைந்த கனவு




அமரர் **கல்கி**



## முதல் அத்தியாயம்

# அரண்ய வீடு

ஆயனரின் அரண்ய வீட்டைச் சுற்றி மீண்டும் மரங்கள் செழித்து வளர்ந்து வானோங்கி நின்றன. நெடுந்தூரம் படர்ந்திருந்த கிளைகளில், பசுந்தழைகளும் இளந் தளிர்களும் அடர்ந்திருந்தன. சில விருட்சங்களில் மலர்கள் கொத்துக் கொத்தாய்க் குலுங்கின. இளங்காற்றில் மரக்கிளைகள் அசைந்து ஒன்றோடொன்று மோதியபோது, உதிர்ந்த மலர்கள் பூமியில் ஆங்காங்கு புஷ்பக் கம்பளம் விரித்ததுபோல் கிடந்தன. அந்த மலர்களின் நறுமணம் நாலாபுறமும் 'கம்' என்று நிறைந்திருந்தது.

கானகத்துப் பறவைகள் அவ்வப்போது கலகலவென்று ஒலி செய்து, அங்கே குடி கொண்டிருந்த நிசப்தத்தைக் கலைத்தன.

ஆயனர் வீட்டுக்குச் சற்றுத் தூரத்தில் இருந்த தாமரைக் குளத்தில் தண்ணீர் ததும்பி அலைமோதிக் கொண்டிருந்தது. தாமரை இலைகள் தள தள வென்று விளங்கின. அந்த இலைகளின் மீது தண்ணீர்த் துளிகள் முத்துக்களைப்போல் தத்தளித்துக் கொண்டிருந்தன. இளங் காற்றில் தாமரை இலைகள் அசைந்த போது, அந்த ஒளி முத்துக்கள் அங்கு மிங்கும் ஓடியது, கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது.

இந்த இயற்கை அழகையெல்லாம் பார்த்து அநுபவிப்பதற்கு மனிதர்கள் மட்டும் அங்கே இல்லை.

ஆயனரின் அரண்ய வீட்டைச் சுற்றி முன்னொரு காலத்தில் நூற்றுக்கணக்கான சிற்பக்கலைச் சீடர்கள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். தற்சமயம் அங்கே சீடன் எவனும் காணப்படவில்லை.

அங்கே இப்போது குடிகொண்டிருந்த சூனியத்தின் வேதனையை இன்னும் அதிகப்படுத்தும்படியாக அரண்ய வீட்டுக்குள்ளிருந்து ஒரே ஒரு தனிக் கல்லுளியின் சத்தம் 'கல் கல்' என்று கேட்டுக் கொண்டிருந்தது.

ஆம்; வீட்டுக்குள்ளே ஆயனச் சிற்பியார் மீண்டும் கையில் கல்லுளி எடுத்து வேலை செய்து கொண்டிருந்தார்.

அருமைப் புதல்வியை ஆயனர் பறி கொடுத்து இப்போது ஒன்பது ஆண்டுகளுக்குமேல் ஆகிவிட்டன. இத்தனை காலமும் அவர் உயிர் வாழ முடிந்தது மீண்டும் சிற்பத் தொழிலில் கவனம் செலுத்திய காரணத்தினாலேதான்.

பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னே, நாம் அந்தச் சிற்பக் கிரஹத்தில் பார்த்ததைக் காட்டிலும் இப்போது அதிகமான நடனச் சிலைகளைப் பார்க்கிறோம். சிலை வடிவம் ஒவ்வொன்றும் சிவகாமியை நினைவூட்டுகின்றன.

மண்டபத்தின் சுவர்களிலே அந்த நாளில் நாம் பார்த்த சித்திரங்கள் எல்லாம் இப்போது நிறம் மங்கிப் போயிருக்கின்றன.

இதிலிருந்து அஜந்தா வர்ண இரகசியத்தை இன்னும் ஆயனர் தெரிந்து கொள்ளவில்லையென்று நாம் ஊகித்துக் கொள்ளலாம்.

ஆயனரின் உருவத் தோற்றத்திலும் பெரிய மாறுதலைக் காண்கிறோம். அவருடைய தலை ரோமம் தும்பைப் பூவைப்போல் வெளுத்துப் போயிருக்கிறது. கண்கள் குழி விழுந்திருக்கின்றன. முகத்திலே சுருக்கங்கள் காணப்படுகின்றன. அவரை இப்போது ஆயனக் கிழவர் என்று கூறினால் யாரும் ஆட்சேபிக்க முடியாது.

ஆயனர் தமது வேலையில் முழுக் கவனத்தையும் செலுத்திக் கொண்டிருந்தபடியால், வீட்டின் வாசலில் இரட்டைக் குதிரை பூட்டிய ரதம் வந்து நின்ற சத்தம் அவர் காதில் விழவில்லை.

''தாத்தா!'' என்ற மழலைக் குரலைக் கேட்டதும் திரும்பிப் பார்த்தார். மாமல்ல நரசிம்ம சக்கரவர்த்தியும் அவருடன் இரு குழந்தைகளும் வாசற்படியைத் தாண்டி வந்து கொண்டிருந்தார்கள்.



மாமல்லரின் உருவமும் ஓரளவு மாறியிருந்தது. அவருடைய முகத்தில் யௌவனத்தின் தளதளப்புக்குப் பதிலாக முதிர்ச்சி பெற்ற கம்பீர தேஜஸ் குடிகொண்டிருந்தது. படபடப்புக்குப் பதிலாகத் தெளிந்த அறிவும் முரட்டுத் துணிச்சலுக்குப் பதிலாக வயிர நெஞ்சத்தின் உறுதியும் அவருடைய கண்களிலே பிரகாசித்தன.

அவருடன் வந்த குழந்தைகளின் முகத் தோற்றத்திலிருந்து அவர்கள் அண்ணனும் தங்கையுமாக இருக்க வேண்டுமென்று ஊகிக்க முடிந்தது. அண்ணனுக்கு வயது எட்டு இருக்கும்; தங்கைக்கு ஆறு இருக்கும்.

மாமல்லருடைய சாயல் இருவர் முகத்திலும் காணப்பட்டது.

''தாத்தா!'' என்று கூவிக்கொண்டு இரு குழந்தைகளும் ஆயனரிடம் ஓடினார்கள். ஆயனர் அவர்களை, ''என் கண்மணிகளே வாருங்கள்!'' என்று சொல்லி வரவேற்றார். அவர்களைத் தம் தோளின் மேல் சாய்த்துக் கொண்டு கொஞ்சிச் சீராட்டினார். அவருடைய கண்களில் கண்ணீர் துளித்தது. அது குழந்தைகளைக் கண்டதனால் ஏற்பட்ட ஆனந்தக் கண்ணீரா, அல்லது நடந்திருக்கக் கூடியதையும் நடக்காமற் போனதையும் நினைத்துக் கொண்டதனால் ஏற்பட்ட தாபக் கண்ணீரா என்று யாரால் சொல்ல முடியும்!

குழந்தைகள் சற்று நேரம் ஆயனருடன் விளையாடிக் கொண்டிருந்த பிறகு, மாமல்ல சக்கரவர்த்தி அவர்களைப் பார்த்து, ''குந்தவி! மகேந்திரா! இரண்டு பேரும் வெளியே ஓடிப்போய்ச் சிறிது நேரம் விளையாடிக் கொண்டிருங்கள். நான் தாத்தாவுடன் கொஞ்சம் பேசிவிட்டு வருகிறேன்!'' என்று சொல்லிக் கொண்டே குழந்தைகளைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டுபோய் வெளியில் விட்டார். ''கண்ணா! குழந்தைகளைப் பார்த்துக் கொள்!'' என்று சாரதியைப் பார்த்துச் சொன்னார்.

அதோ குதிரைக் கடிவாளங்களைப் பிடித்துக் கொண்டு நிற்பவன் கண்ணபிரான்தான். அவன் முகத்தில் இப்போது கறுகறுவென்று மீசை வளர்ந்திருந்தது.

குழந்தைகளை வெளியில் விட்டுவிட்டு வீட்டுக்குள்ளே திரும்பி வந்த மாமல்லரைப் பார்த்து ஆயனர், ''பிரபு! தாங்கள் எனக்கு இட்ட கட்டளையை நிறைவேற்றிவிட்டேன். நூற்றெட்டாவது நடனச் சிலை இன்றோடு வேலை முடிகிறது'' என்றார்.

சிவகாமியின் பிரிவினால் ஆயனரின் அறிவு நாளுக்கு நாள் சிதறிப்போய் வருவதைக் கண்ட நரசிம்மவர்ம சக்கரவர்த்தி, அவரை நூற்றெட்டு நடனத் தோற்றச் சிலைகளையும் பூர்த்தி செய்யும்படி கட்டளையிட்டிருந்தார். ஆயனர் வேலை செய்யத் தொடங்கிய நாளிலிருந்து அவருடைய அறிவு பாதுகாக்கப்பட்டு வந்தது.

''ஆயனரே! என்னுடைய ஆயத்தங்களும் முடிந்து விட்டன. விஜயதசமியன்று யுத்தத்துக்குப் புறப்படுகிறோம். காலையில் ஆயுதபூஜை நடத்திவிட்டு மாலையில் வாதாபி யாத்திரை தொடங்குகிறோம்!'' என்றார் மாமல்லர்.

''ஐயா! நானும் கேள்விப்பட்டேன். திருக்கழுக்குன்றம் மலைச்சாரலில் வந்து சேர்ந்திருக்கும் மாபெருஞ் சைனியத்தைப் பற்றிக் குண்டோதரன் கூறினான். கண்ணுக் கெட்டிய தூரம் யானைப் படையும், குதிரைப்படையும், காலாட் படையும் ஒரே சேனா சமுத்திரமாய் இருக்கிறதாமே? இன்னமும் வீரர்கள் வந்து சேர்ந்து கொண்டிருக்கிறார்களாமே? வாளும் வேலும் ஈட்டியும் மலை மலையாகக் குவிந்து கிடக்கின்றனவாமே? குண்டோதரன் வந்து சொன்னதைக் கேட்டதும் எனக்கே திருக்கழுக்குன்றம் போய்ப் பார்க்க வேண்டுமென்று தோன்றியது.

''ஆயனரே! திருக்கழுக்குன்றத்தில் இறங்கியிருக்கும் படைகள் நமது சைனியத்தில் மூன்றில் ஒரு பங்குதான்; வடக்கே பொன் முகலி நதிக்கரையில் ஒரு பெரிய சைனியம் நமது சேனாபதி பரஞ்சோதியின் தலைமையில் காத்திருக்கிறது. தெற்கேயிருந்து பாண்டியனுடைய சைனியம் விரைந்து வந்து கொண்டிருக்கிறது. வராக நதிக்கு அருகில் வந்துவிட்டதாக இன்றுதான் செய்தி கிடைத்தது.

''பிரபு! என்னை மன்னிக்க வேண்டும், தாங்கள் காலங்கடத்திக் கொண்டிருப்பதாக எண்ணி நொந்து கொண்டிருந்தேன். எப்

பேர்ப்பட்ட பகீரதப் பிரயத்தனம் செய்திருக்கிறீர்கள் என்று இப்போதுதான் தெரிகிறது....''

''பகீரதப் பிரயத்தனம் என்றா சொன்னீர், ஆயனரே!''

''ஆம் ஐயா!''

''ஒரு சம்பவம் ஞாபகம் இருக்கிறதா? மகேந்திர பல்லவரும், நானும், நீங்களும் கடல் மல்லைத் துறைமுகத்தில் பாறைகளைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தோம். திடீரென்று மழை பிடித்துக் கொண்டது. ஒரு பாறை இரண்டாய்ப் பிளந்தது போல் நடுவில் பள்ளமாயிருந்தது. பாறையில் பெய்த மழைத் தண்ணீர் அந்தப் பள்ளத்தின் வழியே தடதடவென்று கொட்டியது. 'ஆகாச கங்கை விழுகிறது!' என்று நான் சொன்னேன். உடனே, மகேந்திர பல்லவர், 'சிற்பத்துக்கு நல்ல விஷயம்; இங்கே பகீரதன் தவத்தைச் சித்திரிக்கலாம்' என்றார். நீங்களும் அதை ஒப்புக் கொண்டு சிற்பிகளை அழைத்து வேலை தொடங்கும்படி சொன்னீர்கள். அப்போது நான் தந்தையிடம் பகீரதன் கதை சொல்லும்படி கேட்டுக் கொண்டேன்.

''பகீரதன் கதையை அன்று மகேந்திர பல்லவரிடம் கேட்ட போது எனக்கு ஒரே வியப்பாயிருந்தது. பகீரதனுடைய தவத்



துக்கு என்னென்ன இடையூறுகள் நேர்ந்தன? அவ்வளவையும் சமாளித்து அவன் எடுத்த காரியத்தைச் சாதித்ததைக் குறித்துப் பெரிதும் ஆச்சரியப்பட்டேன். இளம்பிள்ளைப் பிராயத்தில் அப்பாவிடம் கேட்ட அந்தக் கதை இப்போது எனக்கு வெகு உபயோகமாயிருந்தது. ஆயனரே! வாதாபியிலிருந்து நான் உங்கள் குமாரியை அழைத்து வராமல் திரும்பி வந்தபோது, மூன்று வருஷத்துக்குள்ளே படை திரட்டிக் கொண்டு வாதாபிக்குப் போகலாம் என்று எண்ணியிருந்தேன். வரும் வழியெல்லாம் அவ்வாறுதான் நானும் பரஞ்சோதியும் திட்டம் போட்டுக் கொண்டு வந்தோம். மூன்று வருஷத்தில் நடத்த எண்ணிய காரியத்துக்கு ஒன்பது வருஷம் ஆகி விட்டது.''

''பல்லவேந்திரா! ஒன்பது வருஷம் ஆயிற்று என்றா சொன்னீர்கள்? ஒன்பது யுகம் ஆனதாக எனக்குத் தோன்றுகிறது!''

''எனக்கும் அப்படித்தான், ஆயனரே! சிவகாமியைப் பார்த்துப் பல யுகம் ஆகி விட்ட மாதிரிதான் தோன்றுகிறது. ஆனாலும், நான் என்ன செய்ய முடியும்? இரண்டு வருஷம் நாட்டில் மழையில்லாமல் பஞ்சமாய்ப் போயிற்று. ஒரு வருஷம் பெரு மழையினால் சேதங்கள் நேர்ந்தன. இலங்கை இளவரசன் மானவன்மனுக்கு



சிவகாமியின் சபதம் முதன் முதலில் கல்கியில் பிரசுரமான போது அதற்குப் படம் வரைந்தவர் வர்மா. தற்போது சிவகாமியின் சபதம் நான்காம் பாகம் முதல், மணியம் செல்வனின் படங்களுக்குப் பதிலாகப் பழம்பெரும் ஓவியர் வர்மாவின் படங்களையே பிரசுரிக்கத் தொடங்கி இருக்கிறோம். வாசக அன்பர்கள் இந்த மாற்றத்தை ஏற்றுக் கொள்வதுடன், ம.செ.யின் வண்ணப் படங்களை ரசித்தது போலவே வர்மாவின் நுணுக்கமான கலைப் படைப்புகளையும் அனுபவித்து மகிழக் கோருகிறோம்.

- ஆசிரியர்

ஒத்தாசை செய்ய வேண்டி வந்தது. பாண்டியனுக்கும் சேரனுக்கும் மூண்ட சண்டையில் தலையிட்டுச் சமாதானம் செய்விக்க வேண்டியிருந்தது. இத்தகைய காரணங்களினால் மனச்சோர்வு ஏற்பட்ட போதெல்லாம் அடிக்கடி துறைமுகத்துக்குச் சென்று பரதனுடைய தவச் சிற்பத்தைப் பார்த்தேன். மீண்டும் ஊக்கமும் தைரியமும் அடைந்தேன். கடைசியில் பரதன் முயற்சி பலிதமடைந்ததுபோல், என்னுடைய பிரயத்தனமும் பூர்த்தியடைந்து விட்டது. அடுத்த வாரத்தில் போருக்குப் புறப்படப் போகிறேன்.''

''பிரபு! இது என்ன? 'புறப்படப் போகிறேன்' என்று சொல்கிறீர்கள்?'' என்று கேட்டார் ஆயனர்.

''வேறு என்ன சொல்லவேண்டும், ஆயனரே?''

'''புறப்படப் போகிறோம்' என்று சொல்ல வேண்டும். பல்லவேந்திரா! இன்னும் எத்தனை காலம் நான் உயிரோடிருப்பேனோ, தெரியாது. சிவகாமியை ஒரு தடவை கண்ணாலே பார்த்து விட்டாவது கண்ணை மூடுகிறேன்.''

மாமல்லர் தம்முடைய கண்களில் துளித்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, ''ஐயா! உம்முடைய மகளுக்காக நீர் உயிர் வாழ்ந்தே ஆக வேண்டும். சாவைப் பற்றி நினைக்கவே வேண்டாம். நீங்கள், வந்தே தீரவேண்டுமென்றால் அழைத்துப் போகிறேன். விஜயதசமியன்று புறப்பட ஆயத்தமாயிருங்கள்!'' என்றார்.

(தொடரும்)

## அருள்வாக்கு

யோகிக்கு அடையாளம் என்ன! பரமாத்மாவிடம் சேர்ந்து விட்ட அவனது மனசு வேறு எதையுமே சேர்த்துக் கொள்ள நினைக்காது.

மனசு அதற்கப்புறம் ஓடவே முடியக் கூடாது. அப்படி ஆகி விட்டால்தான் அதற்கப்புறம் இப்போது இந்த மனசினால் நமக்கு உண்டாகியிருக்கிற அத்தனை தொந்தரவுகளும் தொலைந்து போகும். அந்த நிலையைப் பெறுவதற்கு எதைச் சேர வேண்டும்? மனசு எதிலிருந்து உற்பத்தியாயிற்றோ அதைத்தான் சேர வேண்டும். மனசு அதன் மூலத்தில் சேர்ந்து விட்டால், அங்கே அப்படியே கரைந்து போய் விடும். அப்புறம் ஓடாது. அதுவே சகல தொந்தரவுகளிலிருந்தும் விடுபட்ட நிலை. நதி இருக்கிறது. அதன் மூலம் - உண்டான இடம் - என்ன? சமுத்திரம். சமுத்திர ஜலம்தான் ஆவியாகப் போய் வேறொரு இடத்திலிருந்து நதியாக ரூபம் எடுக்கிறது. அந்த ஆறு ஓடாத ஓட்டமில்லை. இப்படி ஓடி ஓடிக் கடைசியில் தன் மூலமான சமுத்திரத்தில் வந்து விழுகிறது. அப்புறம் அதற்குத் தனி ரூபம் உண்டா? ஓட்டம் உண்டா? ஒன்றும் இல்லை. இப்படி நதிகளுக்கெல்லாம் மூலமாக இருந்து முடிவில் அவற்றைத் தன்னிலேயே சேர்த்துக் கொள்கிற சமுத்திரம் மாதிரி, நம் மனசுகளை எல்லாம் முடிவான சேர்க்கையில், யோகத்தில் தன்னோடு கரைத்துக் கொள்கிற ஒன்று இருக்கிறதா என்றால், இருக்கிறது. சமாதி நிலையில் ஞானிகள், யோகிகள் தங்கள் தனி மனசைக் கரைத்து விட்டு வெளிப் பிரக்ஞையே இல்லாமல் இருக்கும் போது இந்த வஸ்துவிடம்தான் சேர்ந்திருக்கிறார்கள். சமாதி நிலைக்கு அப்புறம் ஒரு யோகி அந்த வஸ்துவை விட்டு விட்ட மாதிரி நமக்குத் தோன்றினால் கூட உண்மையில் இது நீங்காத சேர்க்கைதான். உள்ளூர அவருக்கு அந்தச் சேர்க்கையின் அநுபவமேதான் இருந்து கொண்டிருக்கும். அதனால்தான் அவர் வெளிப் பிரக்ஞையோடு இருக்கிற மாதிரி நமக்குத் தோன்றுகிறபோது கூட, அதை அடைய வேண்டும், இதை அடைய வேண்டும், என்கிற ஆசை எதுவுமே அவருக்கு இல்லை. ஏதாவது ஒன்று தனக்கு வேண்டுமென்று கொஞ்சம் கொஞ்சம் ஒருத்தனுக்குத் தோன்றி விட்டால் கூட அவன் யோகியில்லை. அவன் ஸ்வாமியைச் சேரவில்லை என்றுதான் அர்த்தம்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

ஓர் அதிசய ரிப்போர்ட்

# விண் மீது கண்!

உலகிலேயே மிகப் பெரிய தொலை நோக்கி - டெலஸ்கோப் - இந்தக் கோடையில் செயல்படவிருக்கிறது.

200 அங்குல விட்டமுள்ள தொலை நோக்கிதான் இன்று வரை பெரிது. கலிஃபோர்னியாவில் ஒரு மலை மீது செயல் படுகிறது.

சோவியத்தில், 236 அங்குல டெலஸ்கோப் ஒன்று உண்டு. ஆனால் அது பழுதுற்றிருக்கிறது.

இப்போது செயல்படவிருக்கும் தொலைநோக்கிக் கண்ணாடி 400 அங்குல விட்டமுள்ளது!

இது அமெரிக்காவின் ஹவாய் மாநிலத்தில் 13,600 அடி உயரத்தில் மானா கியா என்ற மலை மீது அமைக்கப்படுகிறது. இதற்கு கெக் - KECK என்று பெயரிட்டிருக்கிறார்கள்.

400 அங்குல விட்டமுள்ள கண்ணாடியை ஒரே வார்ப்பில் செய்ய முடியுமா? செய்தாலும் அது எதிர்பார்க்கப்படும் குணங்களுடன் இருக்குமா? தன் எடையிலேயே அது தொய்ந்து வளைந்து விடுமே!

குழப்பங்களுக்கு விடை அளித்தவர் கலிஃபோர்னியா பல்கலைக் கழக விண்வெளி ஆய்வாளர் ஜெர்ரி நெல்சன். அவர் சொன்னார் : ''400 அங்குலக் கண்ணாடியை ஒரே வார்ப்பில் செய்யாமல், பல பகுதிகளாகச் செய்து 'மொசைக்' போல இணைப்போம்! ஒவ்வொரு பகுதியையும் தனித்தனியே உருவாக்கி பாலிஷ் செய்து பரிசோதித்து இணைப்பதால் செலவு குறையும். கண்ணாடி உடைந்து விடுமோ என்ற கவலையும் இராது.''

நெல்சனின் மொசைக் டிசைனை வேறு பல ஆராய்ச்சியாளர்கள் ஏற்கவில்லை. ஆனாலும் நெல்சன் நம்பிக்கையோடு செயலாற்றித் தமது திட்டத்தை நிறைவேற்ற ஒப்புதலும் பெற்றார். கலிஃபோர்னியா பல்கலைக் கழகம் நன்கொடை தேடும் முயற்சியில் இறங்கியது. வில்லியம் கெக் என்ற பெட்ரோலியம் எண்ணெய்த் தொழிலதிபர் ஏழு கோடி டாலர் தந்தார். டெலஸ்கோப்பும் அவர் பெயரைப் பெற்றது.

மாசசூசட்ஸ் மாநிலத்தில் 'ஐ டெக் ஆப்டிகல் சிஸ்டம்' என்ற ஒரு நிறுவனம், 36 கண்ணாடிப் பகுதிகளைச் செய்யப் பொறுப்பேற்றது. ஒவ்வொரு கண்ணாடியும் 400 கிலோ எடை! 3 அங்குல கனம்; ஆறு அடி நீள - அகலம்!

நவம்பர் 1990ல் ஒன்பது கண்ணாடிப் பகுதிகளை மட்டும் பொருத்தி பரிசோதித்துப் பார்த்தார்கள். அதிலேயே ஆறு கோடி ஒளியாண்டு தொலைவில் இருந்த ஒரு விண்மீன் கூட்டத்தைப் பார்க்க முடிந்தது. ஒன்பது தனித்தனி பிம்பங்கள் டீவி திரையில் விழ, அவற்றை கம்ப்யூட்டர் மூலம் ஒருங்கிணைக்க, துல்லியமான, அழகான படம் உருவாகியது. ஆயினும் கண்ணாடியில் சிறு குறைகளும் கண்டு பிடிக்கப்பட்டன. அவை சீர் செய்யப்பட்டன. இதற்கு காமிராக்கள் தயாரிக்கும் கொடாக் நிறுவனம் உதவியது.

கெக் தொலைநோக்கி, விண்வெளி குறித்தும் நட்சத்திர மண்டலங்கள் பற்றியும் வியத்தகு புதிய செய்திகளைத் தெரிவிக்கும் என்று எதிர்பார்க்கலாம். அது ஒருபுறமிருக்க இந்தத் தொலை நோக்கியே ஒரு வியப்பான விஷயம்தான். அது இருக்கும் மலை உச்சியில் விஞ்ஞானிகள் இருக்கத் தேவையில்லை. மலைக்குக் கீழே இரண்டு மைல் தொலைவில் தலைமையகத்தில் வசதியான சூழலில் அமர்ந்து கம்ப்யூட்டர்கள் உதவியுடன் ஆய்வுகளைத் தொடரலாம்!

எல்லாவற்றையும் விடப் பெரிய அதிசயம், மொசைக் முறையில் இணைக்கத் துண்டு துண்டாகத் தயாரிக்கப்பட்ட, கோடிக்கணக்கான டாலர் பெறுமானமுள்ள கண்ணாடிகளைப் 'பாக்' செய்து தபால் மூலம் அனுப்பினார்கள் என்பது தான்!

- வாஷிங்டன் ஸ்ரீதரன்

# இது காத்திருக்கும் காலம்

**கா**லை டிபன் நேரம். கல்லா மேசைக்குள் கம்பீரமாக அமர்ந்து பில் தொகைகளைப் பெற்றுக் கொண்டிருந்தார் தணிகாசலம். அவரையே வைத்த கண் விலக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான் பாஸ்கர்.

அந்த ஏரியாவில் நான்கைந்து ஹோட்டல்கள் இருந்தும் கூட, இவரது நிர்வாகத் திறமையால் கூட்டம் இங்கு மட்டும் எப்போதும் குவிந்த வண்ணமே இருக்கிறது.

பெருநகரக் கல்லூரி ஒன்றில் எம்.பி.ஏ. படித்துக் கொண்டிருந்த பாஸ்கருக்கு, தன் மாமாவைப் பார்க்கப் பெருமையாக இருந்தது.

''என்ன பாஸ்கர்? எத்தனை நாள் விடுமுறை? வீட்டுக்குப் போனியா?.... கல்யாணி என்ன சொல்றா?....''

- கல்யாணி அவரது மகள். அவனது முறைப் பெண்!

''கல்யாணியா?... ம்.... ம்... வீட்டுக்குப் போயிட்டுத்தான் வந்தேன் மாமா... அவ எங்கிட்டே என்ன சொல்றா?... படிக்கிறேன், படிக்கிறேன்னு புத்தகங்களுக்குள்ளே உட்கார்ந்திருக்கா!...'' என்றான் அலுத்துக் கொள்வது போல! - பின்னே, 'பிளஸ் டூ பரீட்சை நேரத்தில் படிப்பதையும் விட்டு விட்டு என்னோடு ஒரு மணி நேரம் உட்கார்ந்து அரட்டை அடித்தாள்' என்று இவரிடம் உண்மையைச் சொல்லிக் கொண்டிருக்க முடியுமா என்ன? மனிதர் கடித்துக் குதறி விட மாட்டாரா!.....





''ம்... அப்படிச் சொல்லு!...'' லேசாகச் சிரித்துக் கொண்டார்.

அந்த நேரம் பார்த்து, டவரா செட்டில் பாலோடு கல்லா டேபிள் அருகே வந்தார் ஒரு சர்வர்.

''ஒரு போர்ன் விட்டா....'' என்று டபரா செட்டை வைத்தார்.

கீழே குனிந்த தணிகாசலம் காலிற்கருகே இருந்த கதவைத் திறந்து ஒரு புது போர்ன்விடா பாட்டிலை எடுத்து மேலே வைத்தார்.





சர்வர் அதைத் திறந்து பாலில் ஒரு கரண்டி போட்டுக் கொண்டு நகர்ந்து விட ''டேய்! முரளி! இந்த பாட்டிலை எடுத்துக் கொண்டு போய்ப் பத்திரமா கணக்குப் பிள்ளையிடம் கொடு....'' என்று ஒரு காலி பாட்டிலை மேஜை துடைத்துக் கொண்டிருந்த சிறு வனிடம் நீட்டினார்.

''கண்ணாடி பாட்டில்டா... பத்திரமாப் பிடி.... உடைஞ்சா நாலு ரூபாயைச் சம்பளத்திலே பிடிக்கடுவேன். ஜாக்கிரதையாக் கொண்டு போய்க் கணக்குப் பிள்ளையிடம் கொடு. உன் ரஜினி ஸ்டைலை எல்லாம் இதிலே காட்டாதே... வழுக்கிடப் போகுது...'' எச்சரித்தவாறே கொடுத்தார்.

கையில் வாங்கிய சிறுவன், பாவம்! அடுத்த அடி எடுத்து வைக்கும் போதே தடுமாறி பாட்டிலை நழுவ விட, சிலீர் என்ற சிலிர்ப்போசையோடு பாட்டில் சிதறிப் போனது.

முதலாளி வெகுண்டெழுந்தார். சிறுவன் நடுநடுங்கிப் போனான்.

''அடேய், கபோதிப் பயலே!.... சொல்லித்தானேடா கொடுத்தேன் பாவி! போடா. ஓடிப்போய்ச் சீக்கிரமா விளக்குமாத்தை எடுத்து வந்து கூட்டுடா.... யாரு

**ராஜ் கோகுல்**

காலிலேயாவது குத்தித் தொலைச்சிடப் போகுது....''

சிறுவன் செய்வதறியாது விழித்து நின்றான்.

''என்னடா முழிக்கிறே! பாட்டில் காசை சம்பளத்திலே பிடிச்சுட்டுத்தான் கொடுப்பேன் போ... ஓடு... விளக்குமாத்தை எடுத்துட்டு வா....''

சம்பளம் குறையப் போகிறது என்ற நினைப்பில் சிறுவன் அப்படியே நிற்க, வேகமாகக் கல்லாவை விட்டு இறங்கி வந்த முதலாளி அவனைத் தரதரவென்று இழுத்து உள்ளே அனுப்பினார்.

பாஸ்கர் அதிர்ந்து போனான். மாமா கண்டிப்பானவர் என்பது அவன் அறிந்தது தான். ஆனால் இந்த அளவுக்கு இரக்கம் இல்லாதவரா? நாலு ரூபாயை அந்த ஏழைச் சிறுவனின் சம்பளத்தில் பிடிப்பேன் என்று மிரட்டுகிறாரே!



"வேலைக்காரி ரொம்பக் கோபமாப் போறாளே, என்னவாம்?"

"அவ சொல்ற ஊர்வம்பை நான் ரசிச்சுக் கேட்காட்டி, வேலையை விட்டு நின்னுடுவேன்னு மிரட்டிட்டுப் போறா!"

– சீர்காழி வி. ரேவதி

பாஸ்கரால் கேட்காமல் இருக்க முடியவில்லை. கேட்டுவிட்டான். ''என்ன மாமா இது?... கை நழுவித்தானே போட்டுட்டான். அதுக்கா இப்படி?'' ''கம்மா இரு பாஸ்கர்.. உனக்கு இதெல்லாம் புரியாது...'' ஒரே வரியில் அவனை அடக்கி விட்டார் மாமா.

மணி பார்த்தான். பதினொன்றை நெருங்கிக் கொண்டிருந்தது. பன்னிரண்டு மணிக்குப் புறப்பட்டு விட வேண்டும். அப்போதுதான் பன்னிரெண்டரை மணிக்குக் கல்யாணியின் ஸ்கூலுக்குப் போய்ச் சேர முடியும். காத்திருப்பாள். பாட்டில் சம்பவம் மறந்து அவனுக்குள் ஒரு புது உற்சாகம் பிறந்தது.

''பாஸ்கர்.... இப்படி வா. கல்லாவைப் பார்த்துக்கோ. நான் மன்னார்குடி வரைக்கும் போயிட்டு வர வேண்டியிருக்கு. மதியம் இங்கேயே சாப்பிட்டுக்கோ. நான் சாயந்திரம் வந்துடுவேன்'' அவனது பதிலை எதிர்பார்த்து நிற்காமல் மளமளவெனக் கிளம்பி விட்டார் மாமா!

பாஸ்கர் கவலையோடு கல்லாவில் அமர்ந்தான். மாமா சாயங்காலம் திரும்பி வரும் வரை கல்லாவிலேயே உட்கார்ந்திருக்க வேண்டுமா?... அப்படியானால் கல்யாணியை ஸ்கூலில் போய்ப் பார்ப்பது?... காத்திருந்து ஏமாந்து போவாளே!... அவன் தவித்தான்.

மன்னார்குடி போன மாமா திரும்பி வந்த போது மாலை ஆறு மணியாகி விட்டது. பாஸ்கருக்கு மாமாவைப் பார்த்ததும் மீண்டும் உற்சாகம் ஊற்றெடுத்தது.

''நான் வீட்டுக்குப் போறேன் மாமா....''

''வீட்டுக்கா?... அங்கே போய் என்ன பண்ணப் போறே? போரடிக்கும். எல்லா பசங்களுக்கும் சம்பளம் போடுற வேலை இருக்கு. முடிச்சுட்டுப் போகலாம் இரு.''

மாமாவின் கண்டிப்பான குரல் அவனைத் தடுத்து நிறுத்தியது.

சம்பளத்தில் பாட்டில் பணத்தை ஞாபகமாகக் கழித்துக் கொண்டார் மாமா. மீண்டும் வீட்டுக்குப் புறப்பட யத்தனித்தான் பாஸ்கர். 'கல்யாணி ஸ்கூலுக்கு ஏன் வரவில்லை என்று ஏகமாகக் கோபித்துக் கொள்வாள். எப்படிச் சமாதானம் செய்வது?'

''என்ன பண்ணப்போறே வீட்டிலே போய்?... போகலாம் இரு....'' மாமா அவனை விட்டபாடில்லை. கோபம் கோபமாக வந்தது அவனுக்கு.

ஒரு வழியாக ஹோட்டல் முடித்து பூட்டி, சாவியை எடுத்துக் கொண்டு மாமாவுடன் வீடு வந்து சேர மணி பத்தரை ஆகி விட்டது. பத்து மணிக்கெல்லாம் தூங்கிப் போய்விடும் கல்யாணி அவனை எதிர்பார்த்து, படிப்பதாக 'பாவலா' பண்ணிக் கொண்டிருந்தாள்.

''பாஸ்கர்! கை காலை அலம்பிட்டு வா சாப்பிடலாம்....'' என்று சப்தமிட்டார் மாமா. கல்யாணியிடம் ஒரு வார்த்தை கூடப் பேச முடியவில்லை....

அடுத்த நாள் காலையிலும் கல்யாணியோடு தனியாகப் பேசும் வாய்ப்பு அமையவில்லை. ஏழு மணிக்கே அவனையும் கழுத்தில் கை வைக்காத குறையாகத் தள்ளிக் கொண்டு போய் விட்டார் ஹோட்டலுக்கு!

'ஏதடா இது தண்டனையாகப் போய் விட்டது! இரண்டு நாள் லீவில் பேசாமல் ஹாஸ்டலிலே ஜாலியாகத் தூங்கிக் கொண்டிருந்திருக்கலாம்' என்று நினைத்தவாறே கல்லாவில் உட்கார்ந்திருந்தான் பாஸ்கர்.



கல்யாணியின் கோப முகம் வந்து வந்து அவனை வசைபாடிச் சென்றது. 'சே! இன்னைக்காவது ஸ்கூலுக்குப் போய்ப் பார்த்துடணும்.'

அவன் கனவிலும், கற்பனையிலும் மிதந்து கொண்டிருக்க, ஜோராக பேண்ட் சர்ட் போட்ட ஆசாமி ஒருவர் மூக்குப் பிடிக்கச் சாப்பிட்டு விட்டு, பில்லுக்குப் பணம் கொடுக்காமல் நைசாகக் கம்பி நீட்டி விட்டார்.

இதனைப் பார்த்துக் கொண்டேயிருந்த சிறுவன் முரளி ''முதலாளி, முதலாளி! அந்த ஆள் பில்லுக்குப் பணம் குடுக்காம போயிட்டாரு'' என்று கத்திக் கொண்டே சாலையில் இறங்கி ஓட ஆரம்பித்தான்.

உள்ளே மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்த முதலாளி முரளியின் சப்தம் கேட்டு வாசலுக்கு வந்து விட்டார். 'என்ன?' என்பது போல அவர் பாஸ்கரைப் பார்க்க, அவன் விழிக்க, அ த ற் கு ள் வெளியே ஓடிய சி று வ ன் பணம் கொடுக்காமல் போன நபரைக் கையைப் பிடித்து இழுக்காத குறையாக அழைத்து வந்து விட்டான்.

''ஹி... ஹி...! மறந்துவிட்டுப் போயிட்டேன் சார்!'' என்று வழிந்தவாறு பைக்குள் கைவிட்டு பில்லையும் பத்து ரூபாய்த் தாளையும் எடுத்துக் கொடுத்து விட்டு, விரைந்து வெளியேறி விட்டார் ஆசாமி.

''டேய் முரளி! இப்படி வாடா'' என்று அழைத்து விட்டு ''பில் எ வ் வ ள வு பாஸ்கர்?'' என்றார் தணிகாசலம்.

''பத்து ரூபாய் தான்'' என்றான் பாஸ்கர் குற்றவுணர்வோடு.

சிறுவன் வந்து பவ்யமாக நின்றான்.

''அந்த பத்து ரூபாயைக் கொடு'' என்று பாஸ்கரிடம் கேட்டு வாங்கினார். ''இந்தாடா முரளி, நீ அந்த ஆளைக் கவனித்து மடக்கிப் பிடித்து வந்ததற்காக உனக்குப் பரிசு. பத்து ரூபா. வைச்சுக்கோ'' என்று அவனை முதுகில் தட்டிக் கொடுத்த படியே ரூபாய்த் தாளை நீட்டினார்.

முகத்தில் சந்தோஷமும் புன்னகையும் கொப்பளிக்க ரூபாயை வாங்கிக் கொண்டு உள்ளே ஓடினான் சிறுவன்.

பாஸ்கர் தன் மாமாவை ஆச்சரியத்தோடு பார்த்தான். அவரும் அதைப் புரிந்து கொண்டவராய், ''என்ன அப்படிப் பார்க்கிறே?... நேத்திக்கு பாட்டிலை உடைச்ச போது கறாராகச் சம்பளப் பணத்திலே பிடிச்சார். இப்போ பத்து ரூபாயைத் தூக்கிக் கொடுக்கிறாரேன்னு தானே பார்க்கிறே?...''

ஆமாம் என்பது போல தலையை ஆட்டினான் பாஸ்கர்.

''இங்கே பாரு பாஸ்கர்! எதை எந்த நேரத்திலே செய்யணுமோ, அந்த நேரத்திலே செய்யணும். எப்போ ஒண்ணைச் செய்யக் கூடாதோ அதை அந்நேரத்திலே செய்யவும் கூடாது. உதாரணத்துக்கு உன்னையே எடுத்துக்கோயேன்!....''

என்ன சொல்லப் போகிறார் என்று புரியாமல் பார்த்தான்.

''நேத்தியிலே இருந்தே நீ கல்யாணி யைப் பார்த்துப் பேசிக் கொண்டிருக்க என்னமாய்த் தவிக்கிறாய் என்பது எனக்குத் தெரியாமல் இல்லை. ஆனா அதுக்கு இது சரியில்லாத நேரம். இன்னும் பத்து நாளில் அவளுக்கு பிளஸ் டூ இறுதித் தேர்வுகள் வருது. இந்த நேரத்திலே நீங்க சந்தித்துப் பேச ஆரம்பிச்சா அவளுக்குப் படிப்பிலே கவனம் போகுமா சொல்லு?... அதனாலே தான் நேத்து உன்னைக் கல்லாவிலே உட்கார வைச்சுட்டு, நான் மன்னார்குடி போறேன்னு சொல்லிட்டு வீட்டுக்குப் போய் ஒரு தூக்கம் போட்டுட்டு வந்தேன்! இது படிக்க வேண்டிய நேரம்! உனக்கும் தான்! நல்லா படிங்க. நல்லா பரீட்சை எழுதுங்க. அப்புறம் நிறைய நேரம் கிடைக்கப் போகுது. தாராளமாப் பேசலாம், யாரு தடை சொல்லப் போறா?''

பேசி நிறுத்தி விட்டு அவர் பார்த்த அர்த்தபுஷ்டியுள்ள பார்வை அவனை வெட்கப்பட வைத்தது.

''நான் போயிட்டு வர்றேன் மாமா. கல்யாணிகிட்டேயும், அத்தைகிட்டேயும் சொல்லிடுங்க...'' - அவன் புறப்பட்டு விட்டான்!

## ஒரு புதிய தெய்வம்!



☐ மத்தியப் பிரதேசத்தில் நக்சலைட்டுகளைப் பிடிப்பதற்காக பஸ்தார் சென்ற போலீஸ்காரர்களுக்கு ஓர் அதிர்ச்சி. ராஜீவ் காந்தியின் கொலை வழக்கில் பிரதான குற்றவாளிகளில் ஒருவரான 'தனு'வின் போட்டோக்கள் பல இடங்களில் இருந்தன. நக்சலைட்டுகள் தங்கள் இயக்கப் பெண்கள் வீரம் மிகுந்தவர்களாக இருக்க 'தனு'வை உதாரணம் காட்டி அவளை ஒரு வீராங்கனையின் இடத்திற்கு உயர்த்தி விட்டார்கள்!

- கிருஷ்ணவேணி ரங்கநாதன்



உலகின் மிகச் சிறந்த ஏ. ஸி. எது தெரியுமா...? மனித உடல் தான்! குளிர்ப் பிரதேசமான ஊட்டிக்குப் போனாலும் வரண்ட வெப்பம் தகிக்கும் டெல்லிக்குப் போனாலும் அந்தந்த பிரதேசங்களுக்கு ஏற்பப் புது மணப்பெண் போல் அட்ஜஸ்ட் பண்ணிக் கொள்கிறதே...! சென்னை போன்ற ஊர்களில் அதிகமாக வியர்ப்பதும் உடல் அதிகம் சூடேறி விடாமல் கட்டுப்பாட்டில் வைக்கத்தான்.

உடம்பின் ஏ. ஸி. டக்கராக வேலை செய்கிறதே என்று நாம்

# உலகின் மிகச்

அதனை ரொம்பவும் சோதித்துக் கஷ்டப்படுத்தினால் 'பிரேக் டவுன்' ஆகிவிடும்!

பிரேக் டவுனில் ஒரு வகைதான் ஸன் ஸ்ட்ரோக்... கடும் வெயிலினால் மூளையிலுள்ள நரம்பு மண்டலம் பாதிக்கப்படுவதையே ஸன் ஸ்ட்ரோக் என்கிறோம்.

இதில் மூன்று நிலைகள் உண்டு. ஆரம்ப நிலையில் தலை வலி, கண் எரிச்சல், பசியின்மை, சிறுநீர் குறைவாகப் பிரிதல் போன்ற அறிகுறிகள் இருக்கும். எலுமிச்சை ஜூஸ், சோடா, மோர் போன்ற வற்றில் உப்பு சேர்த்துக் குடித்தால் நல்ல நிவாரணம் கிடைக்கும்.

இரண்டாம் நிலை : கடுமையான ஜுரம் மற்றும் மயக்கம். உடனே மருத்துவமனையில் சேர்த்து ட்ரிப் கொடுக்க வேண்டி வரும். ஏ.ஸி. அறை சிபாரிசு செய் வார்கள். கட்டுப்படியில்லையென் றால் ஐஸ் கட்டிகளை அறையில் அடுக்கி ஃபானை வேகமாகச் சுழல விடலாம். ஈரத் துணியால் உடம்பில் ஒற்றி உஷ்ணத்தை உடனடியாகக் குறைக்கலாம்.

மூன்றாம் நிலையில் ஜுரம் 106 முதல் 114 டிகிரி வரை போய் விடும்! நரம்பு மண்டலம் நிரந்தரமாக பாதிக்கப்பட வாய்ப்பு உண்டு; உயிருக்கே ஆபத்து.

இதில் கலபமாக ஏமாற்றும் விஷயம் என்னவென்றால் சிலருக்கு உடம்பைத் தொட்டுப் பார்த்தால் சூடே தெரியாது! ஆசனவாயில் தெர்மாமீட்டர் வைத்துத் தான் ஜுரத்தின் கடுமையைக் கண்டறிய முடியும்! மூன்றாம் நிலையில் எமர் ஜென்ஸி வார்டில் சேர்க்கப்படுபவர், மூளையின் வெப்பம் தாங்கும் மையம் வலுவாக இருந்தால் பிழைத்துக் கொள் வார்!

வெயிலிலேயே நின்று வேலை செய்து பழகியவர்களின் உடலில் ஏ. சி. அமைப்பு நன்றாகத் தாக்குப்பிடிக்கும். இவர்கள் தங்கள் வேலைக்கு ஏற்ப நிறைய நீராகாரம் அருந்தும் பழக்கமும் கொண்டிருப்பார்கள்.

சொகுசாக இருந்து பழகி விட்டவர்கள் தான் அதிக எச்சரிக்கையாக இருக்க வேண் டும். வெயிலில் செல்லும் போது குடை எடுத்துக் கொண்டு போக வேண்டும்.

மேல்நாடுகளில் தொப்பி அணிவது குளிருக்கு மட்டுமல்ல; வெயிலுக்கும்தான். இந்தப் பழக்கத்தைக் கௌரவம் பாராமல் காப்பியடிக்கலாம்.

இன்னும் சில dos and donts :

- ரத்த அழுத்தம் உள்ளவர்கள் கடும் வெயிலில் வெளியே போக வேண்டாம்.
- வாக்கிங் ஜாகிங் வழக்கமுள்ள வர்கள் இளம் வெயிலுக்கு முன்னரே அவற்றை முடிக்க வேண்டும்.
- ஏ. ஸி. இல்லாத தியேட்டரில் சினிமா பார்க்க வேண்டாம்.
- நிறைய தண்ணீர், திரவ உணவு பருகுங்கள்.
- அசாதாரணமான களைப்பூட்டும் வேலைகளைத் தவிர்க்கவும்.
- கைக் குழந்தையுடன் கூட்டம் நெரிசல் மிகுந்த இடங்களுக்குப் போக வேண்டாம்.
- வீட்டில், பணியிடத்தில் வெயில் அதிகம் தெரிந்தால், திரைச்சீலை/ தட்டி பயன்படுத்துங்கள். கோணிச் சாக்குகளை நனைத்துத் தொங்க விடலாம்.

டாக்டர் பலராமனைப் பேட்டி கண்டு தொகுத்தவர் : பானுமதி ராமச்சந்திரன்

## 'சீப் அண்ட் பெஸ்ட்!'

உடம்பின் ஏ. ஸி. ஓவர் டைம் வேலை செய்து வியர்வையை வெளியேற்றும் போது வியர்வையுடன் தாது உப்புக்கள் வெளியேறுகின்றன. இந்த இழப்பை ஈடுசெய்ய நிறைய இளநீர், பழ ஜூஸ் வகைகள் உட்கொள்வது நல்லது. இவற்றில் உடலுக்கு முக்கிய மாகத் தேவைப்படும் பொட்டாஷியம் உப்பு இருக்கிறது. (நம் அன்றாட உண வில் சேரும் உப்பில் சோடியமே அதிகம்)

பாக்கெட்/பாட்டில் பானங்களில் சிட்ரிக் ஆஸிட் இருப்பதால் வயிற் றுக்கு அவ்வளவாக நல்லதல்ல...

தர்பூசணி, வெள்ளரி போன்ற 'சீப் அண்ட் பெஸ்ட்' அயிட்டங்கள் பட்டி யலில் பானகம் நீர் மோரையும் சேர்த் துக் கொள்ளுங்கள்.

பானகத்தில் உள்ள சுக்கு ஜீரணத் துக்கும் வெல்லம் (குளுகோஸ் அடங் கியிருப்பதால்) சிறுகுடலின் சுறுசுறுப் பான இயக்கத்துக்கும் உதவும். நீர் மோரில் உள்ள பெருங்காயமும் வாயு வைப் போக்கிப் பசியைத் தூண்டும்.

- டாக்டர். பி. கீதா

# சிறந்த ஏ.ஸி.





# 5 நிலா மயக்கம்

**சுபா**

பாட்டி திரும்பினாள். கண்ணாடி விளிம்பை மீறி, காட்ராக்ட் படிந்த அவளது கண்கள், தோள் வழியே எட்டிப் பார்த்த நந்தினியைப் பார்த்தன. 'தப்பு செய்து விட்டோமா' என்ற குற்றஉணர்வில் நந்தினி பார்வையைத் தழைத்துக் கொண்டாள். பாட்டியின் பார்வையில் என்னவோ கேள்வி இல்லை?

நந்தினிக்கு இப்போது அந்தப் பரிசுப் பொருளைப் பாட்டியிடமிருந்து வாங்குவதா வேண்டாமா என்பது ஒரு கேள்வியாகி விட்டது. அது விசுவரூபமெடுத்துப் பொதிகை அளவுக்கு வளர்ந்து விட்டது.

''என்னடியம்மா?'' என்றாள் பாட்டி. குரலில் ஒரு கிண்டல் இல்லை? இல்லை! ஒரு எள்ளல் இல்லை? இல்லை! இருக்கிறது. ம்ஹூம். இல்லை! இல்லை!!

''என்ன பாட்டி?'' என்று புது ப்ளேடால் சீவப்பட்ட பென்சில் முனை போல ஒல்லியான குரலில் கேட்டாள் நந்தினி.

பாட்டியின் 'என்னடியம்மா' இன்னும் பதில் கிடைக்கப் பெறாமல் அந்தரத்தில் அவள் தலைக்கு நேர் மேலே மின்விசிறியாகச் சுழன்று கொண்டிருந்தது. விழுந்து விடுமோ என்ற பயத்துடன் அண்ணாந்து பார்க்க வைக்கிற, எப்போதுமே விழாத, சுழலும் மின்விசிறி.

''இதுக்கு என்ன அர்த்தம்?'' விழுந்து விட்டது.

''எதுக்கு பாட்டி?'' பாட்டி எதற்கு அர்த்தம் கேட்கிறாள்? கவிதைக்கா? பரிசுப் பொருளுக்கா? கொடுத்த பெயருக்கா? பாட்டிகள் வெறும் வாயை மெல்லுபவர்கள். வதந்தி பரப்பிகள். பரப்பும் வேகம் ஒளிவேகத்தை விட இரு மடங்கு அதிகம். கடவுளே, என்னை நுணலாக்கி விடாதே.

''இந்த பாட்டுக்குத்தான். என்ன பாட்டு அது. சத்தம் போட்டுப் படி.''

''உளி பொளிந்து சிதைப்பதால்தான் சிற்பம் சிறக்கிறது. இலையுதிர்த்த மரங்களில்தான் வசந்தம் பிறக்கிறது. இழந்து பெறும் . வாழ்க்கையிலும் ஏதோ சுகமொன்று இருக்கிறது.''

''பாடம் படிக்கற மாதிரி படிக்கிறியே. ஒனக்கு இந்தக் கதை கவிதைலல்லாம் புடிப்பு இல்லையா?''

''படிப்பேன். அ னு ப விக்கப் படிப்பேன்னு சொல்ல முடியாது.''

''எனக்கு சுஜாதா கதைன்னா உசிரு. பொன்னியின் செல்வன்னா சோறு தண்ணி கூட வேணாம். இந்த ஆழ்வார்க்காடியான் ஒரு தடவை லங்கையில் ஆனைக்குப் பயந்து போய் மலைக் குழில விழுவாம் பாரு. கஜேந்திர மோட்சம் கெடைச்சிருச்சின்னுதான் நெனைச்சேன்னு வந்தியத்தேவன் சொல்வாம்பாரு. நான் சிரிக்கறதைப் பாத்தா எனக்குப் பயித்தியந்தான் புடிச்சிருக்குன்னு மத்தப்பேரெல்லாம் நெனைச்சிக்குவாங்க.''

''ஆழ்வார்க்காடியான் இல்ல பாட்டி. ஆழ்வார்க்கடியான்.''

''அப்ப கதை படிக்கற பொண்ணுதானே? இந்தக் கவிதைக்கு அர்த்தம் சொல்லு.''

பாட்டி சரியான 'சாணக்கி'. கெண்டையைப் போட்டு விராலைப் பிடித்து விட்டாள்.

நந்தினி தனக்குள் ஏற்பட்ட பாட்டி பிரமிப்பை மறைத்துக் கொண்டாள்.

''கல்லு உடையுதுன்னு கஷ்டப்பட்டா சிற்பம் கெடைக்காதில்லை. பழைய எலை போய்டுதேன்னு நெனைச்சா, புது எலை பச்சைப் பசேல்னு வராதில்லை.''

''அதெல்லாம் சரிதான். இழந்து பெறும் வாழ்க்கையிலும் ஏதோ சுகம் ஒன்று இருக்கிறதுன்னு கடைசில எழுதியிருக்குதே. அதுக்கு என்ன அர்த்தம்?''

கேள்வி இப்படி திடீர் என்று தன் மார்பில் வந்து தாக்கும் என்று நந்தினி எதிர்பார்க்கவில்லை. அருண்குமார் வெகு நாகரீகமானவன். தன் காயத்தில் இருந்து ஒழுகும் ரத்தத்தை வெளிக்காட்டிப் பரிதாபம் தேடாதவன். கோழை நரி போல் ஒதுங்கி நின்று சிங்கம் உண்பது கண்டு ஊளையிடாதவன்.

வாழ்க்கையின் ஓர் இழப்பு. இன்னோர் இனிமையான வரவுக்குக் கூறும் கட்டியம். அதனால் வாழ்வை வீணாக்காதே. களித்திரு. பழையன கழி. புதியன நினை. எவ்வளவு நாசுக்காக அவன் கூறி விட்டுப் போய் விட்டான். ஐயோ பாட்டி. இது எனக்கே எனக்கென்று கூறப்பட்ட பதினோராம் கட்டளை. இதை எப்படி நானுனக்கு...

''இல்ல பாட்டி... நான் இதுவரைக்கும் அம்மா, அப்பா, தங்கச்சின்னு இருந்தேன் இல்ல... இனிமே அவங்களை எல்லாம் மறந்துட்டு இருக்கணுமே. அதை நெனைச்சிக் கவலைப்படாதே. மாமியார், நாத்தனார், ஒங்களை மாதிரி பாட்டி, தாத்தான்னு ஒன் வாழ்க்கைல ஒரு வசந்தம் வரும். அது மனசுக்குச் சொகமா இருக்கும்னு இதைப் பரிசாக் குடுத்தவரு சொல்லாம சொல்லியிருக்காரு.''

''ஊட்டுக்காரனைப் பத்தி மட்டும் அதுல சொல்லலையா?''

''அதுவுந்தான்.''

''நீ சொல்லலையே....''

''சொன்னா நீங்க கிண்டலடிக்க ஆரம்பிச்சிடுவீங்க. எல்லார் முன்னாலயும் நீங்க நேத்து என்னை என்ன பேச்சு பேசினீங்க?'' என்று பாட்டியை மடக்கும் தோரணையில் கேட்டாலும் நந்தினிக்கு உள்ளுக்குள் ஒரு கன்றுக்குட்டி மெத்தென்று உதைத்தது.

''அந்தப் பையன் தானே இதைக் குடுத்தான்?''

பாட்டி அடுத்த ஆயுதத்தை வீசினாள்.

''எந்தப் பையன்?''

''அதான். செவப்பா, கருட்டை முடியோட, லட்சணமா இருந்தானே?''

இதுவும் கெண்டை - விராலாக இருக்குமோ என்று ஐயம் எழுந்தது.

''நீங்க சொல்ற ஆள் யாருன்னு தெரியலை பாட்டி. ஆனா இதைக் குடுத்தவரு பேரு அருண்குமார். சினிமாவுல அஸிஸ்டெண்ட் டைரக்டரா இருக்காரு.''

''கதைல்லாம் எழுதற ஆளா?''

''அதுவும் எழுதுவாரு.''

''அதான் இந்த மாதிரி பட்டும் படாம, புரிஞ்சும் புரியாம இருக்கற மாதிரி எழுதியிருக்கு.. ஒனக்கு எப்படித் தெரியும் அந்தப் பையனை?''

''நான் வேலை செய்ற ஆபீசுக்கு வந்து அவுங்க எடுக்கற சினிமாங்கள்ல போட்டுக்கற துணிங்களுக்கு எல்லாம் புதுசு புதுசா டிசைன் வரைஞ்சி தச்சி எடுத்துட்டுப் போவாங்க!''

''அப்படியா?'' என்று பாட்டி சொன்னாள்.

நம்பவில்லை. நான் நம்பவில்லை. நான் நம்பவே நம்பவில்லை என்று பாட்டி குரலில் தொனித்ததாக நந்தினிக்குப் பட்டது. அறுபது வயதுக்கு மேற்பட்டவர்களை எல்லாம் வீடு கடத்த வேண்டும்.

இனி பாட்டியோடு அதிகம் பேசக் கூடாது. அவள் கேள்வியில் விஷமம் எங்கே ஒளிந்திருக்கிறது. எங்கே இல்லை என்று பகுத்துப் பார்க்கத் தனக்கு வயது பத்தாது.

நந்தினி பாட்டி நீட்டிய பரிசுப் பொருளை வாங்கினாள். அதைச் சுற்றி







விருந்த அலங்காரத் தாளால் மறுபடி அதைச் சுற்றினாள். கட்டவிழ்த்துத் தொங்கிய ரிப்பனால் மறுபடி கட்டும் போட்டாள்.

''ஏன், மாட்டப் போறதில்லே?''

''இல்ல பாட்டி. அந்தப் படத்துலதான் பேரெதுவும் எழுதலியே. அதனால வேற யாருக்காவது அப்படியே குடுக்கலாம் இல்லே?''

''அடி என் ராசாத்தீ. எவ்வளவு பொறுப்பான கொணம் ஒனக்கு?'' என்று வியந்து கொண்டு பாட்டி திருஷ்டி கழித்தாள். நெட்டி முறித்தாள். ''ஒங்க தாத்தா இந் நேரம் அந்த பீடி எழவைக் கரியாக்கியிருப்பாரு. நான் போறேன். இல்லாட்டி என் முந்தானையைத் தேடிக்கிட்டு இங்கயே வந்துடுவாரு'' என்று வாசல் வரைக்கும் போன பாட்டி அங்கிருந்தே திரும்பிப் பார்த்தாள்.

''கண்ணு...'' என்று அழைத்தாள்.

பாட்டியின் இந்தக் குழைவான விளி ஆச்சரியமாய் இருந்தது. பயத்தையும் கொடுத்தது.

''என்ன பாட்டி?''

''வர்ற வழில ஒனக்கும் என் பேத்திக்கும் சண்டையா?''

''இல்லியே...''

''பின்ன. அது ஏன் மாடிப் படியில போய் ஒக்காந்துகிச்சி. அதுவும் யார் கூடயும் பேசாம?''

''படிக்கறதுக்குத்தான்.''

''கிழிக்கறதுக்குத்தான். பொஸ்தவத்து நடுவுல அந்தப் பையன் போட்டோவை வெச்சிப் பாத்துக்கிட்டிருக்கும்.''

''என்னது?'' என்றாள் அதிர்ந்து போனவளாக.

பாட்டி திரும்பி அவளை நெருங்கினாள்.

''அது லவ் பண்ணுது. எங்கிட்ட சொல்லலை. அண்ணன்காரன்கிட்டயும் சொல்லலை. அவன்கிட்டே சொன்னா அவ்வளவு தான். நாய் மாதிரி லொள்ளுன்னு வுழுந்து புடுங்குவான். அதனாலத் தான் சொல்லலை. எனக்குத் தெரியும். தெரிஞ்சதாக் காட்டிக்கலை. நீ அப்பசைச. வாயைக் கிண்டிப் பாரு. ஒங்கிட்ட சொன்னாலும் சொல்லுவா'' என்று பாட்டி ஒரு மாதிரி ரகசியமான அடிக்குரலில் சொல்லிவிட்டு, அந்த அறையை விட்டு வெளியேறினாள்.

இந்த பாட்டிதான் பாரேன்! இந்த வீட்டின் முன்னறை உலகத்தில் இருந்து கொண்டு எவ்வளவு தூரம் உள்ளிப்பாய்க் கவனித்து விஷயத்தை ஊகித்திருக்கிறது!

---

## இந்த மகாராணி பரம ஏழை!

திருவனந்தபுரம் அருகிலுள்ள கிளிமானூர் ராஜ பரம்பரையைச் சேர்ந்தவர் மகா ராணி கிரிஜாவர்மா தம்புராட்டி. மக்களுக்கு நிலங்களை அள்ளிக் கொடுத்த பரம்பரையைச் சேர்ந்த கிரிஜா தம்புராட்டிக்குச் சொந்தமாக ஒரு செண்ட் நிலம் கூட இப்போது கிடையாது. இந்த நிலையில் கிளிமானூர் பஞ்சாயத்தில் நிலமில்லாத ஏழைகளுக்கு இலவச நிலப்பட்டா வழங்கப் போவதாக ஓர் அறிவிப்பு வந்தது. உடனே மகாராணியும் ''பிரஸ்டிஜ்'' ஒன்றும் பார்க்காமல் தமக்கும் குடி இருக்கக் கொஞ்சம் நிலம் கேட்டு மனுக் கொடுத்தார். அவரது கோரிக்கையை ஏற்று இந்த மகாராணிக்கு பத்து செண்ட் நிலத்தைப் பட்டா போட்டுக் கொடுத்துள்ளார்கள். இந்தப் பட்டாவை ஏதாவது ஒரு பேங்கில் அடகு வைத்துக் கடன் வாங்கி இந்தப் பத்து செண்ட் நிலத்தில் ஒரு குடிசை போட்டு வாழ முடிவு செய்துள்ளார் கிரிஜாவர்மா தம்புராட்டி. இவரது கணவர் மகாராஜா ராஜ ராஜ வர்மா தம்புரானுக்கும் சொந்தமாக ஒரு செண்ட் நிலம் கூடக் கிடையாது!




- எஸ். எஸ். மணி

புவனாவை மெள்ளக் கேட்க வேண்டும். இவ்வளவு சின்னப் பெண். இவ்வளவு பெரிய விஷயத்தில் எப்படி இவ்வளவு தைரியமாக இறங்கினாள் என்று தெரிந்து கொள்ள வேண்டும். நந்தினி ஒரு பெருமூச்சு விட்டு நகர்ந்தாள். தேவராஜ் வந்தால் ஓரளவுக்காவது உற்சாகமாக இருக்கிற மாதிரி தெரிதல் வேண்டும். முகம் கழுவுதல் மூலம், பவுடர் பூசுவதன் மூலம், பொட்டு வைத்துக் கொள்வதன் மூலம்.

நுனைல் இந்த முறை தப்பித்து விட்டது.

நந்தினி ஒவ்வொரு முறை புவனாவுடன் டி.வி.எஸ். ஓட்டும் போதும் அவளிடம் அவளுடைய காதலைப் பற்றிக் கேட்கலாமா கேட்கலாமா என்று நினைத்துத் தள்ளிப் போட்டாள். உளவறிந்து கேட்ட மாதிரி அவளுக்குத் தோன்றி விட்டால்?

ஒரு வாரத்திற்கு மேல் ஆகி விட்டது. உலகில் யாவும் சகஜ நிலைக்குத் திரும்பி விட்டிருந்தன. தேவராஜ் வழக்கம் போல் அடுத்து என்ன சம்பளக் கடன் பெறலாம் என்பதில் மூழ்கி இருந்தான். ஆபீஸில் கல்யாணி பெங்கால் காட்டனா, உறையூர் காட்டனா என்று பட்டிமன்றத்தில் மூழ்கி இருந்தாள். நந்தினி துணிகளைச் சிதைக்கப் புதுப்புது டிசைன்களை உருவாக்கினாள். இழந்து பெறும் வாழ்க்கையிலும் ஏதோ சுகமொன்று இருக்கிறது. சட். அதே செக்கு மாட்டுத்தனம். காலை எழுந்தவுடன் காப்பி, பின்பு சலிப்பு தரும் வீட்டு வேலை. நாள் முழுவதும் ஆபீஸ். மாலை முழுதும் வீட்டு வேலை என்று வழக்கப் படுத்திக் கொண்ட நந்தினி அன்று காலை ஆபீசுக்குப் புவனாவுடன்தான் வந்து சேர்ந் தாள்.

வேலையைத் தொடங்கிச் சிறிது நேரம் ஆகியிருக்கலாம். டிரம் டீக்காரன் ஆபீஸில் சீட்டுக்கு சீட் அவனுடைய பால்வீதியில் பயணப்பட்டுக் கொண்டிருந்த போது நந்தினிக்கு ஃபோன்.

''ஹலோ.''

''ஜி.எச்லேர்ந்து பேசறோம். நீங்க தானே பெரம்பூர்லேர்ந்து வர மிஸஸ் நந்தினி தேவராஜ்?''

''ஆமா. ஏன் என்னாச்சி?''

''நீங்க கொஞ்சம் உடனே புறப்பட்டு இங்க வர முடியுமா? ஒண்ணும் பயப்பட வேண்டியதில்ல... ஆ க் ஸி டெ ண் ட் வார்டுல...'' என்று எதிர்முனை ஆண் குரல் ஒன்று சொல்லிக் கொண்டிருக்கும் போது ஃபோன் தொடர்பு அறுந்து போய், தொலைபேசித் துறையின் அத்தனை எலக்ட்ரானிக் சப்தங்களும் கேட்கத் தொடங்கின.

(தொடரும்)



★ குத்துச் சண்டை வீரர் முகமது அலியிடம் ஒரு பத்திரிகை நிருபர் கேட்டார், ''நீங்கள் குத்துச் சண்டையிலிருந்து விலகி விட்டீர்கள். உங்களின் விருப்பம் என்ன?''

முகமது அலி சொன்னார் : ''எனது கல்லறையில் கீழ்க்காணும் வாசகம் காணப் பட வேண்டும்.

'இப்பொழுது எண்ணுங்கள் நான் எழுந்திருக்கப் போவதில்லை,'

- ச. ராமஸ்வாமி

★ பழையகாலத்தில் சீமையில் கஜக்கோல் ஒரு சமயம் இருந்தது போல் இன்னொரு சமயம் இருக்காது! ஒரு சமயம் நீளம் அதிகமாகவும் இன்னொரு சமயம் நீளம் குறைந்தும் காணப்படும். காரணம், அந்தச் சமயத்தில் யார் ராஜாவோ அந்த ராஜாவின் முழுக்கை நீளம் ஒரு கஜமாகக் கருதப்பட்டதுதான்!

ஆதாரம் : நாடோடி தொகுத்த ''ஸ்ரீரிகன் ஜாக்கிரதை''

- எம். சந்திரசேகரன்



# அச்சாரம்

இருவரையும் காத்திருக்கச் சொன்னார்கள்.

''என்ன ராக, இந்திரலோகம் போல இருக்கு, பங்களா?''

அப்பா தான் முதலில் மௌனத்தைக் கலைத்தார்.

அறை முழுவதும் லாவண்டர் மணம். ஏ.சி.யின் இதம். சோபாவில் சாய்ந்து உட்கார்ந்ததும், இரண்டு பேர், உடம்பைப் பக்குவமாய்ப் பிடித்து விட்டது போல அதன் சுகம். லேசாகத் தூக்கம் வருவது போலிருந்தது.

''வாசல்ல ஏழெட்டு கார் நிக்குது. எத்தனை வேலையாளுக?''

''மெல்லப் பேசுங்க... அவரு பெரிய மில்லியனேர். நீங்க நம்ம ஊர்ல, பண்ணையாளுகிட்ட பேசற மாதிரி பேசிட வேண்டாம். அவர் இன்னைக்கு இருக்கிற பணக்காரர்கள்ல, ரொம்ப செல்வாக்கு உள்ளவரு. ராஜ்ய சபை மெம்பர். தொழிலதிபர். எஸ்டேட் முதலாளி. பஸ் கம்பெனி உரிமையாளர். காலேஜ் கரஸ்பான்டென்ட். பத்திரிகை நடத்துகிறார். கோயில் தர்மகர்த்தா. நூத்துக்கணக்கான ஏக்கர்ல விவசாயம் பண்றவர்னு அவருக்குப் பல மொகங்கள் இருக்கு.''

''இருக்கட்டும் ராக. எனக்கு அவரு யார் தெரியுமில்ல? இவரு அப்பா, எங்க தாத்தா கிட்ட பண்ணையத்துல இருந்த ஆளு. காலம் இவரை இந்த உயரத்துல ஏத்தி வச்சிருக்கு. நமக்குச் சொந்தக்காரரும் கூட.....''

ராக, அப்பாவின் கையை அழுத்தினான்.

''யாரோ வர்றாப்ல இருக்கு?''

காற்றில் மிதந்து வருகிறாற் போல ஓர் இளம்பெண் நடந்து வந்து, இருவருக்கும் எதிராக நின்று புன்னகை புரிந்தாள்.

கோதுமைப் பாலில் குளித்தது போன்ற உடல் நிறம். உளி வைத்துச் செதுக்கியது போல வளைவுகள். பிரம்மாவே தனிக்கவனம் எடுத்துப் படைத்தது போல அழகுத் தொகுப்பு....

''நான் பர்ஸனல் செக்ரட்டரி. என்ன காரணத்துக்காக அவரைப் பார்க்கணும்?'' என்று கேட்டாள்.

குரலுக்கு நறுகும்பிடு போட வேண்டும்.

''நான் அவரு சொந்தக்காரன்மா. இவரு நம்ம மகன். பி.இ. படிச்சிருக்காரு. அமெரிக்கா போய்ப் படிக்கணுன்னு ஆசைப்படறாரு. அது சம்பந்தமா உங்க முதலாளிகிட்ட யோசனை கேக்க வந்திருக்கோம்.'' என்றார் அப்பா.

''உங்க பேர் என்ன?''

''கோண வாய்க்கால் பாளையம் நாச்சிமுத்து மகன் சுந்தரமூர்த்தின்னு சொல்லுங்க. புரியும் அவருக்கு....''

பி.ஏ. புன்னகையுடன் நகர்ந்தாள்.

அவள் போன பின்னும் கூட, அவள் உபயோகித்த செண்ட்டின் மணம் கலையாமல் இருந்தது.

''இந்த பங்களா பத்து லட்சம் ரூபாய்க்குப் போகுமா, ராக?'' மறுபடியும் ராக, அப்பாவின் கையை அழுத்தினான்.

''நமக்கெதுக்குப்பா இந்த விவரம்? இந்த இடத்துல ஒரு செண்ட் நெலமே ஒரு லட்சத்துக்கு மேல. பங்களாவைச் சுத்தி இருக்கிற இடமே ஒரு ஏக்கருக்கு மேல இருக்கும்....''

மீண்டும் பி.ஏ. வந்தாள்.

''உள்ளே கூப்பிடறார்.''

இருவரும் நாலைந்து அறைகளைத் தாண்டி, மாடி ஏறி, விசாலமான ஹாலில் நுழைந்து, அதோடு இணைந்திருந்த அறைக்குள் போனார்கள்.

''உட்காருங்க.... ஜி.ஆர். வந்திடுவார்.''

பி.ஏ. பின் வாங்கினாள்.

அதுவும் ஏ.சி. அறை. போன், டெலி பிரிண்டர், ஃபாக்ஸ் வசதிகள். சுவர் முழுதும் புத்தக அலமாரி, வீடியோ காஸெட்டுகள். ஜன்னலுக்கு வெளியே பங்களா வாசல், கூர்க்கா, சாலை எல்லாம் இலவசமாய்த் தெரிந்தது.

''வாங்க'' என்ற குரல் கேட்டது.

இருவரும் எழுந்து வணங்கினார்கள்.

நல்ல உயரம். முன் வழுக்கை, பளபளப்பான தேகம். பட்டு வேஷ்டி, சட்டை. தங்க பிரேம் கண்ணாடி, வைர மோதிரம்.

''என்னைத் தெரியுதுங்களா? நான் கோணவாய்க்கால் பாளையம்....''

''நல்லாத் தெரியுது. உட்காருங்க... என்ன விஷயமாய் என்னைப் பார்க்க வந்தீங்க?''

''இது என் பையன்... அமெரிக்கா போய்ப் படிக்கோணும்னு ஆசைப்படறான். உங்க ஆலோசனை கேட்டு அதன்படி செய்யலாம்னு வந்திருக்கேன்.''

ஜி.ஆர். மெலிதாய்ப் புன்னகைத்தார்.

''உங்க பேர் என்ன?''

ராக, ''தியாகராஜன் சார்'' என்றான்.

''என்ன படிச்சிருக்கீங்க?''

''பி.இ. சார்.''

''பி.இ.ல?''

''எலக்ட்ரானிக்ஸ் சார்.''

''அமெரிக்காவுக்குப் போயி என்ன படிக்கணும்னு விரும்பறீங்க?''

''இன்னும் நவீனமா இருக்கிற படிப்பை எல்லாம் படிக்கோணும்னு

ஆசைப்படறான்'' என்று அப்பா பதில் சொன்னார்.

''அங்கே தினமும் நவீனம் தான். புதுசு தான். படிச்சிட்டே இருக்கலாம். அங்கே போய்ப் படிக்கிற அளவுக்கு வசதி இருக்கா?''

''உங்களுக்குத் தெரியாதுங்களா? ஒரு பையன் தானுங்களே இவன்? பணத்தைப் புரட்டிச் செஞ்சிடலாமுங்க....''

ஜி.ஆர். தன் இருக்கைக்குப் பக்கத்தில் இருக்கிற குமிழை அழுத்தினார். செக ரட்டரிப் பெண் வந்தாள்.

''இவங்க ரெண்டு பேரையும் டைனிங் ஹாலுக்குக் கூட்டிட்டுப் போ.''

''இல்லீங்க, வரும் போதே சாப்பிட்டுத் தாங்க வந்தோம்!''

''இது சாப்பாடு நேரம் தான். சாப் பிடுங்க, நான் இன்னொருத்தரைப் பார்க்க ணும். அவர் ஏற்கெனவே அப்பாயின்ட் மெண்ட் வாங்கியிருக்காரு.''

''நாங்க, திடீர்னு வந்துட்டமுங்க. மன் னிக்கணும்'' என்றார் அப்பா.

''மேல படிக்கணும்ங்கிறதுல தப்பில்ல. வெறும் படிப்பு படிச்சிட்டு என்ன பண்ணப் போறார்...?''

''படிப்புக்கு ஏத்தவாறு தொழிலைச் சம்பாதிக்கக்க வேண்டியதுதானுங்க....''

''அதை இப்பவே செய்யறது?'' என்ற வர் எழுந்து கொண்டார்.

''ப ர வா யி ல் லை. சாப்பிட்டுட்டு வாங்க. பேசிக்கலாம்.''

வேறு வழியில்லாமல், இரண்டு பேரும் எழுந்து டைனிங் ஹாலுக்குப் போனார்கள்.

''**சா**ப்பாடு பலமுங்க. அது மட்டு மில்லை; எத்தனை கசிருசியா ஒவ்வொண் ணும் இருந்துச்சு... உண்ட மயக்கம் தெளிய ரொம்ப நேரமாகுங்க....'' என்றார் அப்பா.

ஜி.ஆர். புன்னகை செய்தார்.

''நாமெல்லாம் சுகவாசிங்க. இந்தியா விலிருந்து அமெரிக்கா போனா, நம்ம மன செல்லாம், அந்த வசதிகளைப் பார்த்துக் கவ னிக்க அனுபவிச்சா, அதை விடறதுக்கே மனசு வராது. ஒரு வேளைச் சாப்பாடே நம் மளைக் கிறங்க அடிச்சுடுது.... அங்கெல் லாம் நவீன வசதிகள். அழகான பெண்கள். இங்கே இருக்கிற மாதிரி கட்டு திட்டங்கள் இல்லே. நெருங்கிப் பழகலாம். அறிவுக்கு வேலையுண்டு. உணர்ச்சிக்கும் வேலை யுண்டு. கடைசியில் உணர்ச்சி தான் ஜெயிக் கும்.... புரியுதுங்களா?''

''போகும் போதே, ஒரு கல்யாணத் தைப் பண்ணி வெச்சிடலாமுங்க....''

''இங்கேயே கல்யாணம் எதுக்குப் பண் ணிட்டுப் போகணும்?

''ஒரு பத்திரம் தாங்க. ஒரு பொறுப் புணர்ச்சி வருமில்லே. இங்க ஒரு பொண் ணிருக்குன்னு ஒரு ஞாபகம் அடிக்கடி வந்தா, தப்புப் பண்ணாம இருக்க முடியும். இல்லீங் களா?''





## ஜில் ஸ்பெஷல்

ஜி.ஆர். சிரித்தார்.

''பாயிண்டுக்கு வந்துட்டீங்க. ஒரு தொழிற்சாலையை இங்கே கட்டி, தொழிலை விருத்தி பண்ணிட்டு, அமெரிக்கா போனா.... இங்கே தொழில்ல இருக்கிற பிடிப்பு நம்மளைத் திரும்ப வரவழைச்சுடும். அங்கே இருக்கிற நவீன உத்திகளைக் கத்துட்டு, மீண்டும் இங்கே வந்து நம்ம தொழிற்சாலையை இன்னும் விருத்தி பண்ணலாமே? வெறும் படிப்புப் படிச்சுட்டு, அதை நம்ம நாட்டுக்காக உபயோகம் பண்ணாம இருந்துட்டா எப்படி? மேல படிக்கறதுக்குன்னு போற பல பசங்க திரும்பறதேயில்லைன்னு உங்களுக்கே தெரியும்.... அதனாலே இங்கே முதல்ல தொழிலை ஆரம்பிக்கச் சொல்லுங்க....''

''தொழிலுக்கு முதலீடுங்க?''

''அமெரிக்கா போறதுக்குப் பணம் இருக்குன்னு சொன்னீங்களே, அதை முதலீடாப் போடறது?''

''தொழில் செய்யறதுக்கு முன் கூட்டியே அனுபவம் இல்லீங்களே?''

''நான் இருக்கேனே?''

அப்பா மௌனமாகி விட்டார்.

''உங்க ஊர்ல, சொந்த நிலத்துல சின்னதா பாக்டரி வச்சுத் தர்றேன். என்ன தொழில் செய்யலாம்கிறதை, தம்பியைக் கலந்துட்டு, முடிவு பண்ணிடலாம். நெறைய ஸ்கோப் இருக்கு. பாங்க்ல வேணும்னா, கடன் வாங்கித் தர்றேன். நூறு பேருக்கு வேலை தரலாம். அதை டெவலப் பண்ணறதுக்கு அமெரிக்கா என்ன, உலகம் பூரா சுத்திப் பார்க்கலாம். என்ன நான் சொல்றது?''

தியாகராஜன் மன நிறைவுடன் தலையாட்டினான்.

''அப்ப, அடுத்தாப்ல உங்களை எப்பப் பார்க்கலாமுங்க?''

''அடுத்த மாசம் பத்தாம் தேதி வாங்க. விரிவாப் பேசிடலாம். என்ன தொழில்னு முடிவு பண்ணிட்டா, அதுக்குத் தகுந்த ஆலோசகர்கள் இருக்காங்க, அவங்களை வெச்சு, பிராஜக்ட் ரிப்போர்ட் தயார் பண்ணி, செயல்பட ஆரம்பிச்சிடலாம். உங்க முன்னேற்றத்துக்கு, எல்லா வகையிலும் உதவியா நான் இருக்கேன். தைரியமாப்புறப்படுங்க.''

ஜி.ஆர். எழுந்து கொண்டார்.

அப்பாவும் மகனும் மன நிறைவுடன் வணங்கி விடை பெற்றுக் கொண்டார்கள். போர்டிகோவில் ஏழெட்டுக் கார்கள் நின்று கொண்டிருந்தன. ஜி.ஆரைப் பார்க்க வேண்டும் என்று அதில் வந்தவர்கள், காத்திருந்தார்கள்.

''அவர் சொல்றதும் சரிதான் ராசு!''

''ஆமாம்ப்பா.''



### சபாஷ், சரியான போட்டி!

❑ மிகப் பெரிதான இரு சோப்புத் தயாரிப்பு நிறுவனங்கள் இடையே எலுமிச்சை சோப் விளம்பரத்தில் தகராறு ஏற்பட்டது. விளம்பரங்கள், எதிர் விளம்பரங்கள் இவற்றுடன் இந்தப் பெரிய நிறுவனங்கள் நிற்கவில்லை. பம்பாயிலுள்ள ஒரு நிறுவனத்தின் காரியாலயத்திற்கு வெளியே நின்று, மற்றொரு நிறுவனம் சோப்புத் தூளின் மாதிரி பாக்கெட்டுக்களை விநியோகம் செய்து விளம்பரப்படுத்தியது! இதனால் கோபமுற்ற அந்த நிறுவனம் முதல் நிறுவனத்தின் காரியாலயத்திற்கு வெளியே மூன்று யானைகளை நிறுத்தி தங்கள் கொலோன் சோப்பிற்காக விளம்பரம் செய்தனர். போக்குவரத்துத் தடைபட்டு நெரிசல் ஏற்படும் அளவு யானைகளைப் பார்க்கக் கூட்டம் சேர்ந்து விட்டது!

– பிசினஸ் இந்தியா

தகவல் : கிருஷ்ணவேணி ரங்கநாதன்

# ஐஸ் வைப்பது எளிதல்ல!

கருத்து : குமரன்
படம் : செல்லம்

ஐஸ் வைக்கவும் சாமர்த்தியம் வேண்டும். இல்லையென்றால், தலைவர் கூல் ஆவதற்குப் பதில் சூடாக, நீங்கள் அசடு வழிய நேரலாம். சில உதாரணங்கள் :

ஜோன் ஆஃப் ஆர்க் உங்களை
மாதிரியே டிரெஸ் பண்ணிக்குவாங்
களாமே? டிரெஸ் மாட்டிக்கிட்டா ஆச்சா?
உங்க கம்பீர மென்ன?
பர்ஸனாலிடி என்ன? கிட்ட நெருங்க
முடியுமான்னு கேக்கறேன்...
ஹி... ஹி... ஹி...



நீங்க மட்டும் 'டான்ஸி ராணி'ன்னு
க்கரா பட்டம் சூட்டி இருக்கலைன்னா,
சரித்திரம் தெரியாத முட்டாப்பசங்க
இன்னமும் ஜான்ஸி ராணின்னே
சொல்லிக்கிட்டுத் திரிவானுங்க...
ஏன் தலைவரே...? நான் ஏதாச்சும்
தப்பாச் சொல்லிட்டேனா...?



திருப்பதி காங்கிரஸ் மாநாடு
உங்களுக்குத்தான் பெரிய வெற்றி
அத்வானிஜி! சோஷலிஸத்துக்குக் கல்தா
கொடுத்துட்டு, மெய்யான
சோஷலிஸத்தைக் கடைப்பிடிக்கிறதாச்
சொன்னாங்களே, அது நம்ம
பி. ஜே. பி.யைக் காப்பி அடிக்கத்தான்! நாம
மதச்சார்பின்மையை ஒதுக்கிட்டு,
'உண்மையான மதச்சார்பின்மையை
நாங்கதான் கடைப்பிடிக்கிறோம்'னு
சொல்ற மாதிரி... ஹெ... ஹெ... ஏன்,
என்னை ஒரு மாதிரி பார்க்கிறீங்க...?



'நாட்டை உருவாக்குங்கள்! நாட்டைக்
காப்பாற்றுங்கள்!' - பிரமாதமான சுலோகன்
போங்க! திருப்பதி மாநாட்டிலே உங்க
பேச்செல்லாம் காற்றிலே பறந்து
போனாலும் நீங்க கொடுத்த இந்த கோஷம்
என்னென்னிக்கும் நினைவு இருக்கும்...
அதாவது... நான் என்ன சொல்ல
வர்றேன்னா...





☛ சசி சேகர்

● தா. சிந்துகுமார், திருவட்டார்.

? தராசு பதிலில் (26.4.92) 'ஏழைகள்தான் பணக்காரர்களை விட அதிக வரி செலுத்துகிறார்கள்' என்ற வரிக்கான அர்த்தம் புரிய வில்லை, விளக்குங்களேன்?

! ஃபிரிஜ், டீவி முதல் நெருப்புப் பெட்டி வரை நாம் வாங்கும் எந்தப் பொருளானாலும் அதற்கு வரி செலுத்திக் கொண்டிருக்கி றோம் - நம்மையும் அறியாமல் - அதுவும் பல கட்டங்களில் என் பதை நினைவில் கொண்டால் புரிந்து போகும். அரசுக்கு வரும் வரி வருமானத்தில் நேரடி வரிகளின் பங்கு (வருமான வரி போன் றவை) மிக மிகக் குறைவு. மறைமுக வரிகளே அரசுக்குக் காம தேனு.

● எம். குணசேகரன், வேலாயுதம்பாளையம்.

# தி.மு.க. வுக்கு

? 'தம்பி பிரபாகரனை இந்திய அரசிடம் பிடித்துக் கொடுக்க மாட்டோம்' எனப் பிரேமதாசா கூறியிருக்கிறாரே?

! பிடிக்க முடிந்தாலல்லவா கொடுக்கப் போகிறார்! அதனால் அப்படிச் சொல்கிறார்.

● எஸ். ரவி, கொ. கருப்பூர். ❑



☛ மோதும் பங்காளா...

? கூண்டு சிறப்பு பற்றி!

! தமிழக சட்டமன்ற சபாநாயகர் பத்திரிகையாளரை நிறுத்தி வைக்கத் தயாரிக்கும் கூண்டை விட, எம். எல். ஏக்களிடமிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்ளத் தம்மைச் சுற்றியே மகாராஷ்டிர சட்டமன்ற சபாநாயகர் அமைத்துக் கொள்ளும் கூண்டு சிறப் பானது.

● என். கே. ஈசுவரி, பெங்களூர்.

? தமிழ் வருடப் பிறப்பன்று வரிசையாக லீவு வந்தால் வருடப் பிறப்பு என்னங்க செய்யும்? நல்ல நாளும் அதுவுமா நாடு உருப் படாது என்று சொல்லலாமா நீங்கள்?

! நான் ஏதோ மகரிஷி போலவும் என் சாபம் பலித்து விடும் போலவும் நீங்கள் அஞ்சத் தேவையில்லை. ஆனால் மகரிஷி களுக்கு ஒப்பான மகாவீரரும், அம்பேத்காரும், வள்ளுவரும், காந்தியும் இன்னும் பலரும் லீவு விடச் சொன்னதாக நான் அறிந்தேனில்லை. உழைக்கத்தான் சொன்னதாக நினைவு.



☛ தி.மு.க. விசுவாசிகளைக்...

● கே. கணேஷ், சென்னை - 16.

? போஃபர்ஸ் பிரச்னையை வைத்து இன்னும் எவ்வளவு நாட்கள் எதிர்க்கட்சிகள் அரசியல் நடத்தப் போகின்றன?

! ஆளும் கட்சியினரில் பலர் உண்மைகளை மறைக்க முயற்சி செய்து எதிர்க்கட்சிகளின் போஃபர்ஸ் அரசியலுக்கு வாய்ப்பு அளித்துக் கொண்டிருக்கும் வரை.

● மாரி வெற்றிவேல், பட்டுக்கோட்டை.

? கருணாநிதியின் தி. மு. க. வுக்கு எதிர்காலம் உண்டா?

! அந்தக் கட்சியில் தற்போது நடந்து வரும் உட்கட்சி தேர்தல்கள் அதன் ஆரோக்கியத்துக்கு எடுத்துக்காட்டு என்றால் தேர்தலை யொட்டி நடந்துள்ள கொலைகளும் வன்முறையும் பொதுச் சொத் துக்கள் நாசமும் நோய்க் கிருமிகள் உள்ளே புகுந்திருப்பதையும் எடுத்துக்காட்டி எச்சரிக்கின்றன. எதிர்காலம், இதற்குச் செய்யப் படும் வைத்தியம், கொடுக்கப்படும் மருந்தைப் பொறுத்து அமை யும்.

● வி. ஆண்டாள், சின்னசேலம்.

? 'மக்கள் இதயத்தில் நடிகையாகவே இருக்க விரும்புகிறேன்' என முதல்வர் கூறியிருக்கிறாரே!



☛ பிடிக்க முடிந்தால்தானே...

**நீங்கள் கேட்டவை - தராசு**

! மக்கள் இதயத்தில் அரசியல்வாதியாகச் சிறப்பிடம் பிடிக்க முடியும் என்ற நம்பிக்கையை இழந்து வருகிறாரோ என்னவோ!

● எஸ். இராஜசேகரன், கொளப்பாடு.

*? ஹைதராபாத்தில் உள்ள திராட்சைத் தோட்டத்தில் ஜெயலலிதா சொகுசு பங்களா கட்டி வருகிறாராமே?*

! நாம் நடிகையாக இருந்து சம்பாதித்த காலத்தில் வாங்கப்பட்ட நிலம் என்றும் பத்திரிகைகள் தவறான செய்திகள் வெளியிடுகின்றன என்றும் சட்டமன்றத்தில் விளக்கமளித்திருக்கிறார். பதவிக்கு வருகிறவர்கள் உடனுக்குடன் சொத்து விவரங்களைப் பகிரங்கப்படுத்தினால் தவறான ஊகங்களுக்கு இடமிராது.

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

*? 'பொதுச் சொத்துக்களைச் சேதப்படுத்தினால் கடும் தண்டனை விதிக்கப்படும்' என்ற மசோதாவைத் தமிழக அரசு கொண்டு வந்திருப்பது பற்றி...?*

! இதற்கு ஏற்கெனவே சட்டம் உள்ளது. ஆனால் அது போதாது. ஒரு பேரணி அல்லது போராட்டம் என்று நடந்தால் அப்போது சேதமாகக்கூடிய பொதுச் சொத்துக்களுக்குக் கட்சித் தலைவர்கள் பொறுப்பேற்று அரசுக்கு நஷ்டஈடு தர வேண்டும் என்பது புதிய மசோதாவின் நோக்கம். எதிர்க்கட்சி ஊர்வலம் நடத்தும் போது ஆளும் கட்சியின் கையாட்களே சேதம் விளைவித்து விட்டு எதிர்க்கட்சி மீது பழி சுமத்தினால் என்ன செய்வது? சட்டம் இயற்றலாம். நீதிமன்றத்தில் நிற்காது. இதற்கெல்லாம் சட்டம் இயற்றுவதில் பயனில்லை. உட்கார்ந்து பேசி, நல்ல முடிவுகளுக்கு வந்து அதைத் தொண்டர்களுக்கும் உணர்த்துவதுதான் வழி.

● எஸ். ராமசுப்பிரமணியன், தூத்துக்குடி.

*? 'முதல்வர் என்ற சொல்லே எனக்குப் பிடிக்காது' என்று சிவாஜி பேசியிருப்பது குறித்து...?*

! நடிப்பில் அவர் முதல்வர் என்று சொன்னால் கூடவா பிடிக்காது!



☛ பிடிக்கவே பிடிக்காது!

● ஏ. ஜி. கல்யாணசுந்தரம், மணியக்காரன் பாளையம்.

*? சமீபத்தில் நீங்கள் மனம் நெகிழ்ந்த சம்பவம்?*

! அச்சக உரிமையாளர் கணேசன் மரணமடைந்தார் என்பதை அறிந்த போது மனம் நெகிழ்ந்தேன்; நக்கீரன் பத்திரிகை அச்சடித்ததற்காக அவர் போலீஸ் காவலில் கொடுமைப்படுத்தப்பட்டார் என்பது தெரியவந்த போது மனம் நொந்தேன்.

● கே. ஆர். தேவேந்திரன், கொணவட்டம்.

# எதிர்காலம் உண்டா?

*? இப்போது நடக்கும் போரில் ஜெயிக்கப் போவது ஜெயலலிதாவா பத்திரிகை உலகமா?*

! இதை வெற்றி தோல்வி என்ற அடிப்படையில் பார்ப்பதுதான் பிரச்னையைப் பெரிதாக்குகிறது. ஜெ பெருந்தன்மை காட்டினால் சுலபமாக ஜெயித்து விடுவார். ஆனால் அது பத்திரிகைகளுக்குத் தோல்வியாக முடியாது. அவர்களும் பெருந்தன்மையுடன் நடந்து கொள்ளத் தூண்டுகோலாக அமையும். இதைத்தான் ராஜதந்திரம் என்பது.

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

*? தொலைக்காட்சியில் அறிஞர் அண்ணாவின் சிறுகதைகள் தொடர் பற்றி?*

! என்னதான் முயன்றாலும் அறிஞர் அண்ணாவின் பெருமையை இந்தத் தொடரை எடுத்தவர்கள் குறைத்து விட முடியாது என்பது ஓர் ஆறுதல்!

● கே. சத்தியநாராயணன், வேலூர்.

*? விதானசௌதாவை விடச் சிறப்பாகத் தலைமைச் செயலகம் இணைந்த சட்டசபைக் கட்டிடம் கட்டப் போவதாக முதல்வர் அறிவித்துள்ளாரே?*

! இந்தச் செய்திக்குக் கீழேயே பிரசுரமாகும் மற்றொரு செய்தியில் 'எம்.எல்.ஏக்கள் பணச் செலவாகக்கூடிய கோரிக்கைகளைக் கொண்டு வருமுன் பலமுறை யோசிக்க வேண்டும்; அரசின் நிதி நிலைமை மோசமாயுள்ளது; அதைப் படுமோசமாக்கி விடக் கூடாது' என்று முதல்வர் கேட்டுக் கொண்டிருக்கிறார். சிரிப்பதா? அழுவதா?

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
எஸ். ரவி,
கொ. கருப்பூர் - 612 501.

# கொஞ்சம் பெருமை... மிஞ்சும் வேதனை!

◆ தஞ்சாவூர் கதம்பத்தை நீங்கள் குறிப்பிட மறந்து போனாலும், தஞ்சை நகரச் சிறப்பிதழ் கமகமவெனக் கதம்பத்தின் நறுமணம் போல படிக்கப் படிக்கச் சுகமாக இருந்தது.

மதுரை, சுகந்தி நாராயணன்.

◆ தாஜுதீன் என்ற முஸ்லீம் தஞ்சையிலுள்ள இந்துக் கோயில்களின் ஆலயக் கமிட்டியின் தலைவராக இருக்கிறார் என்பதைப் படித்த போது இப்படிப்பட்ட சர்வமத சிந்தனைகள் எல்லோர் மனத்திலும் ஏற்பட்டு விட்டால் மதப் பூசல்கள் அறவே ஒழிந்து விடும் என்று எண்ணாமல் இருக்க முடியவில்லை.

இரணியல், கலை.

◆ தஞ்சை நகரச் சிறப்பிதழில், "இந்து கோயிலுக்கு முஸ்லீம் தலைவர்," "தஞ்சையை மிஞ்சும் கலைத்திறன் ஏது" என்பன படித்துப் பெருமைப் பட்ட நெஞ்சம், அடுத்த நிமிடமே மண்டல மையங்கள், தண்டம்தானா?, அபாய கட்டமேம் பாலம், குறுகலான கீழ்ப்பாலம், அரிக்கப் பட்டுக் கொண்டிருக்கும் அகழி, சீரழிந்து கொண்டிருக்கும் சிவகங்கைப் பூங்கா, மின்சாரத்தில் கமிஷனடிக்கும் நகராட்சி, கதவில்லாத தபால் நிலையம் போன்ற தலைப்புக்களையும் புகைப்பட விளக்கங்களையும் கண்டு மிகவும் வேதனைப்பட்டது.

பட்டுக்கோட்டை, ஏ. சாந்தா ஜெயப்பன்.

◆ விளைநிலங்கள் தரிசுகளாய் மாறி வருகின்ற தஞ்சையைச் சுற்றியுள்ள கிராமங்களை என் மனக் கண்முன்னால் நிறுத்தியது பட்டுக்கோட்டை பிரபாகரின் சிறுகதை.

திருவெண்ணெய்நல்லூர், கி. சி. ஆனந்த குமார்.

◆ விவசாயிகள் கடன் ரத்து பற்றிய கேள்விக்குப் பணக்காரர்களை விட ஏழைகள்தான் அரசுக்கு அதிக வரி செலுத்துகிறார்கள் என்று தாங்கள் தந்த பதில் என் இதயத்தைக் கவர்ந்தது. ஏழைகள் எல்லோரும் விழிப்புணர்வு கொண்டு விட்டால் அரசியல் மோசடி ஒழிந்து விடும்.

மதுரை - 9, பி. சசிகலா.

◆ சிந்திக்க முதலாவது கார்ட்டூன்!
சிரிக்க இரண்டாவது கார்ட்டூன்!
விழுந்து விழுந்து சிரிக்க மூன்றாவது கார்ட்டூன்!
என வெளுத்துக் கட்டிய கல்கிக்குப் பாராட்டுக்கள்.

கொணவட்டம், கே. ஆர். தேவேந்திரன்.

◆ குடும்பத்தில் பால் கார்டு வாங்குவதில் ஏற்படும் இன்னல்களை அப்படியே படம் பிடித்துக் காட்டியது "பால்கார்டு". சிறுகதை எழுதிய கௌசல்யா ரங்கநாதனுக்குப் பாராட்டுக்கள்!

கீழ்வேளூர், கோ. தியாகராஜன்.

◆ சூரியன், சதா செஞ்சுரியாக விளாசும் இக் கோடையில் தஞ்சை - ஏன் தரணி முழுவதும் கூட - தண்ணீர்ப் பஞ்சம் ஏற்படலாம். ஆனால் மழையானாலும் வெயிலானாலும் கவலை மறந்து சிரிக்க வைக்கும் கல்கி ஜோக்குகளுக்கு ஏன் தஞ்சை சிறப்பிதழில் திடீர்ப் பஞ்சம்? ஒரு ஜோக் சிறப்பிதழே எதிர்பார்க்கிறோம்!

சென்னை - 88, கமல. வெங்கடேசன்.

◆ தத்தெடுத்த குழந்தையைப் பெற்ற பிள்ளையெனக் கருதிப் பெயர்சூட்டு விழா நடத்து கொண்டிருக்கையில், ஒதுங்கி நின்று பார்க்கும் உண்மைத்தாய் விடும் உஷ்ணப் பெருமூச்சாகவே தோன்றியது, 'நேருசிலையும் தொடர்கிறதாம்! வேறுசிலையும் வேண்டாமாம்!' என்ற உங்கள் தலையங்கம்.

காட்டூர், எஸ். அருள்மொழி.

◆ சிவகங்கைப் பூங்கா சமூக விரோத செயல்களின் இருப்பிடமாக மாறி வருவதை அழுத்தமாக எழுதி இருக்கலாம். நகராட்சி திரை அரங்கான "திருவள்ளுவர் திரை அரங்கில்" எந்த டிக்கெட் எடுத்தாலும் எங்கு வேண்டுமானாலும் அமர்ந்து படம் பார்க்கும் "வசதி" உள்ளதைக் குறிப்பிட்டிருக்கலாம். இந்தத் திரை அரங்கிற்கு எதிர்ப்புறம் உள்ள மேல்நிலை நீர்த் தேக்கத் தொட்டியின் கீழே சாராய சாம்ராஜ்யம் நடப்பதையும் குறிப்பிட்டிருக்கலாம்.

தஞ்சை, டி. சுப்பிரமணியன்.

## பொட்டலப் பயணங்களில் நரக வேதனை!

◆ கல்கி 12.4.92 இதழில் "பொட்டலப் பயணங்கள்" என்ற தலைப்பில், தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் நடத்தும் 'பாக்கேஜ் டூர்'கள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. துணை மேலாளர் சுப்பையா "இதுவரை எங்களுக்கு எந்தப் புகாரும் வந்தது இல்லை" என்று கூறியுள்ளது உண்மைக்குப் புறம்பானது. கோவா - மந்திராலயம் சுற்றுலாவின் போது நாங்கள் அடைந்த துன்பம் கொஞ்ச நஞ்சமல்ல. கால் நீட்ட முடியாத மினி பஸ்ஸில் ஏஸியும் நீக்கப்பட்டிருந்தது. தூக்கித் தூக்கிப் போட்ட பழைய வாகனம். ஏழு நாள் பயணத்தில் எங்குமே தங்குமிடம் சரியில்லை. தாமதங்கள் காரணமாக ஸ்ரீசைலம் போகவே இல்லை. கோவாவில் தங்க இடமின்றி இரவு பஸ்ஸிலேயே அடைந்து கிடந்தோம். சித்திரவதை குறித்து சுற்றுலா வளர்ச்சிக் கழகத் தலைவர், முதல்வர், சுற்றுலா அமைச்சர் ஆகிய அனைவருக்கும் அங்கிருந்தபடியே தந்தி கொடுத்தோம். சென்னை திரும்பிய பிறகு போகாத இடங்களுக்கும் தங்கும் வசதி தரப்படாத இடங்களுக்கும் பணத்தையாவது திரும்பத் தரக் கடிதம் எழுதினோம். இன்று வரை பதில் இல்லை. இந்த லட்சணத்தில் பிற மாநிலத்தவரும் அயல்நாட்டினரும் இவர்களிடம் என்ன பாடுபடுகிறார்களோ!

சென்னை - 4, ஆர். ராதாகிருஷ்ணன்.

▰ வெனிஷியன் பிளைண்ட் தயாராகிறது



# நேற்று: வெட்டிவேர் தட்டி; இன்று: வெனிஷியன் பிளைண்டு!

"ரஜினி, கமல் வீட்டுக்கெல்லாம் நான் தட்டி செய்து கொடுத்திருக்கேங்க..." என்கிறார் ரங்கராஜன். இருபத்தைந்து வருட காலமாக, சென்னை டி. டி. கே. சாலையில் நடைபாதையில் வெட்டிவேர் தட்டிகள் செய்து விற்று வருகிறார் இவர்.

"கோடைக் காலத்தில்தான் வெட்டிவேர் தட்டிகளும் விசிறிகளும் விலை போகும். மற்ற நாட்களில் சாதாரண மூங்கில் தட்டிகளையே செய்வோம். வெட்டிவேர் தட்டி செய்ய நிறைய முதலீடு தேவை என்பதால், ஆர்டர்கள் பெற்றால்தான் அவற்றைச் செய்கிறோம்.

"வெட்டிவேர் என்பது புல் இனத்தைச் சேர்ந்த தாவரத்தின் வேர்ப் பகுதி. பூமிக்கு மேல் உள்ள இதன் செடிப் பகுதி காய்ந்து, வைக்கோல் போன்று தோற்றமளிக்கும். கேரளாவிலேயே இது அதிகம் விளைகிறது. தமிழ்நாட்டில் கோடிக்கரையில் ஓரளவு கிடைக்கிறது.



▰ தட்டி செய்கிறார் ரங்கராஜன் (படம் : [illegible])

"சென்னை பாரீஸ் கார்னரில் வெட்டிவேர் மொத்த விற்பனை செய்கிறார்கள். மூட்டை எண்ணூறு ரூபாய் வரை விலை கொடுத்து வாங்க வேண்டும். தட்டி கட்டும் வெள்ளைக் கயிறு கிலோ சுமார் நாற்பது ரூபாய் விலை. இதைத் தவிர மூங்கில் கட்டைகளும் வாங்க வேண்டும். அவற்றை மெல்லிய குச்சிகளாகச் சீவி வெட்டிவேரின் குறுக்கே அண்டை கொடுத்து, தட்டி செய்வோம். ஒரு மூட்டை வேரில் மூன்று, நான்கு தட்டிகளாவது செய்தால்தான் லாபம். அதனால் அவ்வளவு ஆர்டர்கள் சேரும் வரை காத்திருக்க வேண்டும். இப்போது இந்தத் தட்டிகளை உபயோகிப்பது வெகுவாகக் குறைந்து விட்டது. சதுரடிக்கு ஏழெட்டு ரூபாய் என்று நாங்கள் விலை சொல்லும் போது பலர் தயங்குகிறார்கள்...

"ஆனால் வெட்டிவேர் தட்டியை மாட்டித் தண்ணீர் தெளித்து விட்டால் அதன் குளிர்ச்சியே அலாதிசுகம்தான்! வீடுகளில் உபயோகிப்பதுடன் சிலர் கார்களின் மேலும் இவற்றை விரித்துத் தண்ணீர் தெளிக்கிறார்கள்.

"கோடைக் காலத்தில் தொடர்ந்து வெட்டிவேர் தட்டி தயாரித்தால் எங்களுக்கே ஜலதோஷம் பிடிப்பதுண்டு...!"

என்று கூறும் ரங்கராஜன் இந்தக் குடிசைத் தொழில் செழிக்க, அழியாமலிருக்க, அரசாங்க ஆதரவு அவசியம் என்பதையும் கட்டிக்காட்டுகிறார்.

முன் காலத்தில் பெரிய மனிதர் வீடுகளிலும் அலுவலகங்களிலும் வெட்டி வேர் தட்டிகள் அநேகமாய் இருக்கும். இன்று அவற்றின் இடத்தை வெனீஷியன் பிளைண்





● தண்ணீரில் வெட்டிவேரைப் போட்டு வைத்து அருந்தினால், ரத்த சோகை, தலை சுற்றல், பித்தம், வாய்ப்புண் போன்றவை குணமாகும். தொண்டை வறட்சி நீங்கி தாகம் அடங்கும். மஞ்சள் காமாலைக் கிருமி களுக்கெதிராகத் தடுப்புச் சக்தியைத் தரும்.

● வெட்டி வேர் தைலம் உடல் சூட்டைத் தணிக்கும்.

● தீப்புண்ணை ஆற்ற, வெட்டி வேர்ச் செடியின் காய்ந்த வைக்கோல் போன்ற பகுதியினைக் (வேர் அல்ல) கொண்டு செய்த களிம்பை உபயோகிக்கலாம்.

● வெட்டி வேரைப் போலவே தோற்ற முடையது விளாமிச்சை வேர். ஆனால் இதற்கு வெட்டிவேரின் மருத்துவக் குணங்கள் கிடை யாது. அசல் வெட்டி வேர், அடர்த்தியாக, நீளமாக, மஞ்சள் கலந்த வெண்மை நிறத்தில் இருக்கும். விளாமிச்சை வேர் வெண்மையாய் அதிக அடர்த்தியின்றி இருக்கும்.

- டாக்டர் எஸ். கே. தமிழ்மணி
(இயற்கை மருத்துவர்)

டுகள் பிடித்து வருகின்றன. இதற்கு முக்கிய காரணம் ஏஸி வசதி வந்து விட்டதுதான். தட்டி கட்டி நீர் தெளிக்க அவசியமில்லாமல் போகிறது. மணம் வேண்டுமென்றால் அதற்கும் ஸ்ப்ரே வந்து விட்டது!

மெல்லிய அலுமினியப் பலகைகள் விசிறி மடிப்புப் போல் அடுக்கப்பட்டு கயிறுகளால் இணைக்கப்படுகின்றன. இவற்றை ஜன்னல்களில் curtain போல் தொங்க விடுகிறார்கள். கயிறை இழுப்பதன் மூலம் அலுமினியப் பலகைகளுக் கிடையேயுள்ள இடைவெளியைக் கூட்டவோ குறைக்கவோ செய்ய லாம். அதற்கேற்ப அறையின் வெளிச்சமும் காற்றோட்டமும் வேறுபடும்.

“வெனிஷியன் பிளைண் டுகளுக்குத் தேவையான அலுமி னியப் பலகைகள் மேல்நாடு களிலிருந்து இறக்குமதி செய்யப் படுகின்றன... இங்கே அவற்றுக்கு எனாமல் வண்ணம் ஏற்றி அளவாக வெட்டி, கோத்துத் தருகிறோம்'' என்கிறார் சென்னையில் இந்த நவீனத் திரைச்சீலை நிறுவனத்தை நடத்தும் அனந்த் நாராயணன்.

''இப்போதெல்லாம் தொழில் முறை இன்டீரியர் டெக ரேடர்கள் கவர் பூச்சுக்கு மேட்சாக விதம் விதமான வண்ணங்களில் வெனிஷியன் பிளைண்ட்கள் வேண்டுமென்கிறார்கள். சில வண் ணங்களை இங்கே அளிப்பது கஷ்டம் என்பதால், தேவையான வண்ணம் கொண்ட பலகை களையே இறக்குமதி செய்கி றோம்'' என்று தெரிவிக்கிறார்.

''ஆனால் வெனிஷியன் பிளைண்ட்களின் விலை வாயைப் பிளக்க வைக்கிறதே...?'' என்று கேட்டால் அவர் கூறும் பதில் :

''கர்டன்களை அடிக்கடித் துவைக்க வேண்டும்; பழசானால் மாற்ற வேண்டும்! வெனிஷியன் பிளைண்டுகள் அப்படியல்ல - பராமரிப்பது மிகச் சுலபம்; ஆயுட் காலத்துக்கும் இவை உழைக்குமே...!''

- நமது நிருபர்கள்

## குட்டிக் குளம்; குழந்தைகளுக்குக் குஷி!

அட்டைப் படத்திலுள்ள வட்டத்தொட்டி ஒரு சிறிய அறையின் பாதி அளவு இருக்கும்! அழுத்தமான பிளாஸ்டிக்கினால் ஆன இதனை ஒரு சிறிய சூட்கேஸினுள் அடக்கிவிடலாம் - காற்று இறங்கிய நிலையில்! டையருக்குக் காற்றடிப்பது போல் இதற்கும் காற்று நிரப்பினால்தான் வட்டமான தொட்டி வடிவம் கிடைக்கும்.



பலூன் போல் வாயால் ஊதிக் காற்றை நிரப்ப அரை நாள் ஆகும்! வாக்குவம் கிளீனரின் ப்ளோயரால் காற்றை நிரப்பினால் பத்து நிமிடங்களில் சுட்டது பூரி போல் உப்பிக் கொள்ளும்!

இத் தொட்டி உப்புவதைப் பார்க்கும் போதே குழந்தைகளின் கண்கள் அகல விரியும். இதில் தண்ணீர் நிரப்பி விட்டாலோ ஒரே குஷிதான்!

சுமார் ஐந்நூறு லிட்டர் தண்ணீர் இத் தொட்டியில் பிடிக்கும். அவ்வளவு தண்ணீரை வீணடிப்பதா? என்று தயங்காமல் குழந்தை களுக்குச் சந்தோஷத்தை அளித்து விட்டு, விளையாடி முடித்ததும் தண்ணீரைத் தோட்டத்துச் செடிகளுக்குப் பாய்ச்சி விடலாம். 'எங்கே கிடைக்கும்?' என்கிறீர்களா? மேல் நாட்டில்தான்! இந்தத் தொட்டி கில்பானில் வாங்கியது!



# நாணயம்

''போலாம் ரைட்...'' என்றபடி கண்டக்டர் விசில் கொடுத்தார்.

அதுவரை கீழே நின்ற கூட்டம் அவசர மாய் ஓடி வந்து ஏறியது.

எல்லோரும் வழக்கமாய்த் தஞ்சா வூரில் இருந்து மன்னார்குடிக்கு வருகிற ரெகுலர் பயணிகள்.

கல்யாண நாள் வேறு.... கூட்டம் பஸ் ஸில் பிதுங்கியது.

''டிக்கெட்... டிக்கெட்...''' லாகவ மாய்க் கண்டக்டர் சிறிய இடுக்கில் புகுந்து முன்னேற...

''மன்னார்குடி'' என்றபடி பத்து ரூபாய் நோட்டை நீட்டினேன்.

டிக்கெட்டைக் கிழித்துக் கொடுத்த கண்டக்டர், மீதி ஐந்து ரூபாயை மட்டும் நீட்டி விட்டு நகர்ந்தார்.

டிக்கெட் நாலு தொண்ணூறு. மீதி பத்து பைசா தரவில்லை.

''சார் பத்து காசு....'' கண்டக்டரிடம் கேட்டதும்,

''சில்லறை இல்லே...'' என்றபடி மேலே நகர்ந்தார்.

'அல்பம்...' என்றது உள் மனசு. 'கை நிறையச் சம்பளம் வாங்கறாங்க.... கலெக்ஷன் பேட்டா வேற... இதுல இது மாதிரி சில்லறை இல்லேன்னு பத்து பத்து காசா ஒதுக்கறாங்க... நாம பத்து காசு குறைத்துக் கொடுத்தா ஒத்துக்குவானா... விடக் கூடாது...' மனத்திற்குள் கோபம் எழுந்தது...

வண்டி வடுவூர் நெருங்கும் போது கூட்டம் கொஞ்சம் குறைந்திருந்தது. கண்டக்டர் தனது சீட்டிற்குத் திரும்பிக் கொண்டிருந்தார்.

''சார் பத்து காசு...'' மறுபடியும் நினை வூட்டினேன். லெதர் பையைப் பிரித்து உதறிப் பார்த்துவிட்டு,

''சில்லறை இல்லே தர்றேன்....'' என்றபடி கண்டக்டர் தனது சீட்டில் அமர்ந் தார்.

''விடக் கூடாது... பத்து பைசாவை வாங்கியே ஆகணும்'' என் மனத்தில் வீம்பான பிடிவாதம் வளர்ந்தது.

பஸ் மன்னார்குடியை நெருங்கியது. காமராஜ் சிலை வழியே பஸ் ஸ்டாண்ட் உள்ளே திரும்பிய போது, எதிரே... திருத்துறைப்பூண்டி பஸ் வந்து கொண்

கமலா கந்தசாமி



"லஞ்சம் வாங்கினா வேலையி லிருந்து டிஸ்மிஸ் பண்ணிடுவேன்னு உங்க ஆபீஸ்ல புதுசா ஒரு திட்டம் கொண்டு வந்தீங்களே, லஞ்சம் குறைஞ்சிருக்கா?"

"வெங்காயம்! டிஸ்மிஸ் ஆகற துக்குள்ளே சம்பாதிச்சிடணும்னு அவ னவன் கூடுமானவரை அதிகப்படியா வாங்கறானுங்க!"

- நீலமேகம்

டிருந்தது. நான் பிடிக்க வேண்டிய பஸ் அதுதான்...

'பத்து பைசா போகட்டும்' - நினைத்தபடி ஓடும் பஸ்ஸில் இருந்து இறங்கித் திருத்துறைப்பூண்டி பஸ்ஸில் ஏறினேன். பத்து பைசாவை வாங்க முடியாத வருத்தம் கூடவே வந்தது.

"டிக்கெட்....." கண்டக்டர் நெருங்க....

"திருத்துறைப்பூண்டி ஒரு டிக்கெட்" என்றபடி பணம் எடுக்க நினைத்ததும்....

அதிர்ச்சி...

'எங்கே ஹேண்ட்பேக்?'

'அடடா... அந்த பஸ்ல இல்லே விட்டுட்டு வந்துட்டோம்...'

"சார் வண்டியை நிறுத்துங்க... பணத்தை பஸ்ல விட்டுட்டு வந்துட்டேன்" என்றபடி அவசரமாய் பஸ்ஸில் இருந்து இறங்கி வேகமாய் ஓட்டமும் நடையுமாய் பஸ் ஸ்டாண்ட் அடைந்தேன்.

அங்கே... அந்த பஸ்ஸைக் காண வில்லை. அது திருமக்கோட்டை பஸ். ஐந்து நிமிடத்தில் போயிருக்கும்.

'ஹேண்ட் பேக்கில் பத்தாயிரம் ரூபாய்... பத்து பைசாவுக்கு அலட்டிக் கொண்டோம்... பணம் திரும்பக் கிடைக்குமா?' பயத்தில் சுரீர் என்றது. கடன் வாங்கிய பணம். நகைக் கடனுக்குக் கட்ட வேண்டிய பணம். பணம் கட்டவில்லை என்றால் ஐந்து பவுன் செயின் ஏலத்திற்குப் போய் விடும்.



'என்ன செய்வது?' மனத்தில் பயமும் குழப்பமும் சூழ்ந்திட மயக்கமே வந்து விடும் போலிருந்தது.

போலீஸில் புகார் செய்வதா... இல்லை பஸ் திருமக்கோட்டைக்குப் போயிட்டுத் திரும்பும் வரை காத்திருப்பதா?

கண்ட்ரோல் ரூம் நோக்கி விரைந்தேன்.

"சார் திருமக்கோட்டை போன பஸ் எப்போ திரும்பும்?" பதற்றத்துடன் கேட்டுக் கொண்டே அந்த அறைக்குள் நுழைந்தேன்.

அங்கே...

மேஜை மீது என் கறுப்பு நிற ஹேண்ட் பேக் பத்திரமாய் இருந்தது. சென்ற உயிர் திரும்பியது போல் இருந்தது.

"சார் இது என் ஹேண்ட்பேக் சார்... பஸ்ல விட்டுட்டேன்" - சொல்லும்போதே குரல் நடுங்கியது.

"பதற்றப்படாதீங்க... முதலில் உட்காருங்க... சரி.. அதுல உள்ளே என்ன இருந்தது?" சோதிப்பது போல கண்ட்ரோலர் கேட்க...

"பத்தாயிரம் சார்.... முழுசா நூறு ரூபாய்க் கட்டு... அதோட கர்ச்சீப்... நகை அடகு வச்சிருக்கிற ரசீது... ஒரு சீப்பு... என் டைரி..." வரிசையாய் ஒப்பித்தேன்.

சோதித்த கண்ட்ரோலர்,

"எல்லாம் சரியா இருக்கு... கொஞ்சம் வெயிட் பண்ணுங்க... டெப்போவில போய் மானேஜர்கிட்டே சொல்லி... கையெழுத்துப் போட்டுட்டு வாங்கிட்டுப் போகலாம்...." என்றதும்,

"சார்... யார் சார் கொண்டாந்து கொடுத்தாங்க..." அறிந்து கொள்ளும் ஆர்வத்தில் நான் கேட்க...

"அந்த பஸ் கண்டக்டர்தான் சார். உங்களுக்குப் பத்து பைசா சில்லறை பாக்கியாம். சில்லறை மாத்திட்டு அவசரமா உங்களைத் தேடியிருக்காரு. நீங்க இல்லே. உங்க இடத்துல ஹேண்ட்பேக் கிடந்திருக்கு..."

கண்ட்ரோலர் சொல்லிக் கொண்டே பையுடன் பத்து காசையும் கொடுத்தார்.



# எட்டாத விலையில் ஏ.ஸி.க்கள்

சாதாரணமாக, ஏர்கண்டிஷனர் பொருத்தப்பட்டிருக்கும் அறைக்குள் நுழைந்ததும், ஸ்விட்சைப் போடுவோம். கும்மென்று கருநி சத்தத்துடன் ஏஸி வேலை செய்ய ஆரம்பிக்கும்; ஐந்து நிமிடங்களுக்குப் பிறகுதான் அறை குளு குளு என்று ஆகத் தொடங்கும்.

அறைக்குள் நுழையும்போதே அது குளிரூட்டப்பட்டு நமக்காகக் காத்திருக்க முடியுமா?

''முடியும்!'' என்கிறார் 'பென்ட்டா ஃபோர்' குளிர்சாதனத் தயாரிப்புக்கள் நிறுவன அதிபர் வி.ராமகிருஷ்ணன்.

''எத்தனை மணி முதல் ஏஸி இயங்க வேண்டும்; எப்போது ஆஃப் ஆக வேண்டும் என்று ஏஸியில் வைத்திருக்கும் மைக்ரோ பிராசசர் கம்ப்யூட்டரில் புரோக்ராம் செய்து விட்டால் போதும். தானாக இயங்கத் தொடங்கி, தானாக நின்று விடும்!'' என்கிறார். ''இந்தியாவிலேயே முதன் முதலாக நாங்கள் இதைத் தயாரிக்கத் தொடங்கியிருக்கிறோம்'' என்கிறார் ராமகிருஷ்ணன்.

அதிகாலையில் மூன்று மணிக்குப் படுக்கையைவிட்டு எழாமலே, '3 மணிக்கு ஸ்விட்ச்-ஆஃப்' என்று புரோக்ராம் செய்து விட்டால், ஏஸி நின்றுவிடும்!

''மனிதனுக்கு இதயம் எப்படியோ, அப்படி ஏர்கண்டிஷனருக்கு கம்ப்ரசர்'' என்கிறார் 'பென்ட்டாஃபோர்' நிறுவன தொழில் நுட்ப இயக்குநர் ராஜன். காஸ் (gas) கம்ப்ரசரில் இறுக வைக்கப்பட்டு வெளிவரும்போது சூடாக இருக்கும்; இது கண்டென்சருக்குப் போய், மின் விசிறி யால் குளிர்விக்கப்பட்டு விடுகிறது. குளிர் விக்கப்பட்ட காஸ் திரவமாகிப் பின் காற் றில் கரையுமுன், ப்ளோயர் வழியாகக் காற்றை வெளி யேற்றும் போது குளுகுளு என்றிருக் கிறது.



ராமகிருஷ்ணன்

''சரி, கம்ப்ரச ருக்கு அடுத்த இடம் எதற்கு?''

''மோட்டார், ஃபேன் காயில் யூனிட்'' - என்ற ராஜன், ''அப்படிப் பார்த்தால் தெர் மோஸ்டாட் கூட முக்கியமான பாகம்தான்,'' என்கிறார். ''ஏன், வெகு சாதாரண ஃபில்ட்டர் கூட ஏஸியில் ஒரு முக்கிய அம்சம்!''

திடீரென்று, தில்லி போலவே இங்



கும் ஏர்கூலர்கள் அறிமுகப்படுத்தப்பட்டு வருகின்றன. ''தில்லியில் ஈரப்பதம் பத்து சதவீதம்தான். அதனால் அங்குள்ள சீதோஷ்ண நிலைக்கு ஏர்கூலர் ஏற்றதாய் இருக்கும். சென்னை, பம்பாயில் எல்லாம் ஈரப்பதம் என்பது சதவிகிதம். இங்கே சரிப்பட்டு வராது'' என்கிறார் ராம கிருஷ்ணன்.

ஆனால் டெல்லி மாடலில் ஒரு சில மாற்றங்கள் செய்து இங்கே விற்க முயலு கிறார்கள் சிலர். இதை 'டெசர்ட் கூலர்' என்றும் சொல்லுகிறார்கள். இதன் மூன்று உள்பகுதிகளிலும் நீரைக் கொட்டி, நீர் உள்ளேயிருக்கிற தட்டியை நனைக்கிற



# டிப்ஸ்...டிப்ஸ்...டிப்ஸ்...

பதின்மூன்று வருடங்களாக ஃப்ரிஜ் பழுது பார்த்து வரும் பாஸ்கரனிடம், அதனை எப்படிப் பராமரிப்பது என்று விசாரித்தோம்.

● வாரம் ஒரு முறை டீஃப்ராஸ்ட் செய்ய வேண்டும். பிறகு சுத்தமாக உள்ளே துடைத்து, கதவைத் திறந்து வைத்துவிட வேண்டும். அடைசலான நெடி போன பிறகு சாத்தி விட லாம்.

● ஒரு மணி நேரம் கழித்து 'ஆன்' பண்ண லாம்.

● ட்ரேயில் தண்ணீர் தேங்கி நிற்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

● எறும்பு, சிறு பூச்சி வகைகள் ரீலேயிலும், தெர்மோஸ்டாட்டிலும் ஏறி ஷார்ட் அடிக்காமல் கவனித்துக் கொள்ள வேண்டும்.

● ஸ்டெபிலைசர் சரியாக இருக்கிறதா என்று கண்காணிக்க வேண்டும்.

● ஃபிரிட்ஜை மூன்று வருடத்துக்கு ஒரு முறை யாவது, சர்வீஸ் செய்து விடுவது நல்லது - குறிப் பாக, துருப்பிடிக்காமல் இருக்க.

● வீடு மாறிப் போகும் போது 'பாக்கிங்'கில் கவனமாக இருக்க வேண்டும். ஆட்டி அசைத்தால் கம்ப்ரஸர் பாழாகி, ஷாக் அடிக்கும்.

- இது ஐந்து வருட சர்வீஸ் போட்ட ஃபிரிட்ஜ் விஷயத்தில்தான்!

**- சித்தார்த்**

---

போது, உள்ளிருக்கும் மின்விசிறி இயங்கி, காற்றை உள்ளே இழுக்கிறது. அப்புறம் குளிர்காற்றை வெளியே விடுகிறது. அப் படி வெளியாகிற காற்றில் ஈரப்பதம் இருக்கவே செய்யும். இதனால் சில ருக்கு உடல் ஆரோக்கியம் பாதிக்கப்படக் கூடும்.... எனினும் ஏர்கூலர்கள் விலை குறைவு என்பதால் பலர் நாடுகி றார்கள். எச்சரிக்கை: உப்பு நீரைப் பயன்படுத்தாதீர்கள்; உடம்பு வலி நிச்ச யம்!

**வி**லை குறைவாகிறது என்று உதிரி பாகங்கள் எல்லாவற்றையும் வாங்கி நாமே அசெம்பிள் செய்து ஏஸி உண்டாக்கலாம். ஆனால் எத்தனை நாளைக்கு வரும் என்று உத்தரவாதம் சொல்ல முடியாது! மேலும் கரண்ட் பில்லைப் பார்த்தால் ஏ.ஸி. ரூமில் கூட வியர்க்கும்....!

மத்திய தர மக்களும் ஏஸி வாங்கி வைத்துக் கொள்ளும் அளவுக்கு (டீவி, வி.ஸி.ஆர். போல் 14,000, 15,000க்கு) ஏஸி வராதா?

மூச்! ஏஸியின் விலை முப்பதாயிரத்துச் சொச்சம் என்றால் அதில் பாதி எக்ஸைஸ் வரியாக அரசாங்கத்துக்குப் போய்விடு கிறது. அவர்களைப் பொறுத்தவரை ஏஸி ஒரு 'லக்ஸரி ஐட்டம்'. ஆகவே பட்ஜெட் டில் முதலில் கையை வைப்பது இங்கே தான்!

**- சாருகேசி**

# இயற்கை முறையில் கொசுக்கடியிலிருந்து விடுதலை



பலவித வியாதிகளுக்கு காரணமான கொசுக்கடியிலிருந்து ஆரோக்யமான முறையில் சிக்கன வழியில் நிவாரணம் பெற உபயோகிப்பீர் ''கொசுவலை'' - அதுவும் எமது ''குவாலிடி'' கொசுவலை என்றால் இருமடங்கு உழைப்பு, இருமடங்கு பாதுகாப்பு.

★ நீடித்த உழைப்புக்கு உறுதி செய்கிறது இறக்குமதி செய்யப்பட்ட HDPE நூல்.

★ மிகவும் நெருக்கமான பின்னல்களினால் பெறுவது பரிபூரண பாதுகாப்பு.

★ நெருக்கமான பின்னல்கள் இருந்தாலும் மிகவும் காற்றோட்டமானது.

★ ரசாயன பொருட்களடங்கிய கொசு விரட்டிகளை உபயோகிப்பதால் ஏற்படும் கண்வலி, தலைவலி, மயக்கம், நெஞ்செரிச்சல் போன்ற உபாதைகள் நிச்சயமாக இல்லை.

★ தொடர் செலவுகள் இல்லை.

★ குவாலிடி கொசுவலைகள் பிரின்ஸ் (சிங்கிள் காட் சைஸ்), குயின் (டபுள் காட் சைஸ்) மற்றும் கிங் (சூப்பர் டபுள் காட் சைஸ்) என மூன்றுவித அளவுகளில் பலப்பல வண்ணங்களில் கிடைக்கிறது.

★ எளிதில் கையாளக்கூடியது. நீங்கள் வாங்கக்கூடிய விலையில் தமிழகமெங்கும் இப்பொழுது கிடைக்கிறது.

## "குவாலிடி"
## கொசுவலைகள்

குவாலிடி கொசுவலையை உபயோகியுங்கள்.
குவாலிடி கொசுவலையை உணருங்கள்.

தயாரிப்பாளர்கள் :

**குவாலிடி பிளமண்ட்ஸ்**

(குவாலிடி கொசுவலை தயாரிப்பாளர்கள்)

த.பெ. எண் : 14 40, சின்னாண்டாங் கோவில் வீதி, கரூர்-639 001

வியாபார விசாரணைகள் வரவேற்கப் படுகின்றன.

''சென்னை இராயப்பேட்டை YMCA மைதானத்தில் நடைபெறும் Ideal Home Exhibition இல் ஸ்டால் நெ. 46 இல் அமைந்துள்ள எமது ஸ்டாலுக்கு வருகை தந்து எமது தயாரிப்புக்களை வாங்கிப் பயனடையுங்கள்.''

# ஹேமமாலினி தோற்றார்; ஜெயலலிதா வென்றார்!



முதல் கட்டத் தேர்வில் என்னால் ஏற்கப்பட்ட மூவருக்குமே நான் வழக்கமான 'மேக்-அப் டெஸ்ட்' செய்து பார்க்கவில்லை. இதிலும் ஒரு புதுமை முயற்சியாக, மூவரையும் லொகேஷனுக்கே அழைத்துப் போய் ஷூட்டிங் நடத்தியே பார்த்து விட்டேன்!

''கண்ணன் என்னும் மன்னன் பேரைச் சொல்லச் சொல்ல....'' பாடல் நினைவிருக்குமே! ''மறக்க முடியுமா?'' என்கிறீர்களா! அதை நான் ஏற்கெனவே பதிவு செய்து வைத்திருந்தேன். மூன்று புது முகங்களையும் அழைத்துக் கொண்டு, யூனிட்டுடன் வைகை அணைக்கட்டுக்குப் போய்ப் படப்பிடிப்பே நடத்தினேன் - சோதனை என்ற அளவிலேதான்!

ஒரு புதுமுக நடிகையையும் நடிகரையும் வைத்துப் பாடல் காட்சியையும், மற்றொரு புதுமுக நடிகைக்கு வசனக் காட்சியையும் டைரக்ட் செய்து எடுத்தேன்.

சென்னை திரும்பி, 'ரஷ்' போட்டுப் பார்த்தபோது, இருவரில் ஒரு புதுமுக நடிகை எடுப்பான தோற்றமின்றி ஒல்லியாக என் பார்வைக்குத் தோன்றினார். அவரை நீக்கி விடுவது என்றும் மற்ற இரு புதுமுகங்களையும் ஒப்பந்தம் செய்வது என்றும் தீர்மானித்தேன். இவ்வாறு என்னால் நிராகரிக்கப்பட்ட அந்த நடிகை :



சொன்னால் அதிர்ச்சி அடைய மாட்டீர்களே!

ஹேமமாலினி! ஆம், இன்றும் ஹிந்தி திரை உலகில் ஜொலித்துக் கொண்டிருக்கும் அதே நட்சத்திரம்தான்! ''பேச்சில் ஐயங்கார் வாடை வீசியது'' என்று சென்ற இதழில் நான் குறிப்பிட்ட பெண்.

நான் ஏற்றுக் கொண்டு ஒப்பந்தம் செய்த மற்ற இருவர் : ஜெயலலிதா; ஸ்ரீகாந்த். ''ஸ்ரீகாந்த்'' என்பது நான் சூட்டிய பெயர்தான்.

'ஹேமமாலினி இல்லை' என்றான பிறகு, அந்த வேடத்தில் வேறு யாரை நடிக்க வைப்பது?

''மறுபடியும் புதுமுகம் தேடும் படலமா?'' என்று பார்ட்னர்கள் சற்றுக் கேலியாக மட்டுமின்றி, கவலையோடும் கேட்டனர். படத் தயாரிப்பில் தாமதங்களைத் தவிர்ப்பது எவ்வளவு முக்கியம் என்பதை நாங்கள் எல்லோருமே உணர்ந்துதான் இருந்தோம்.

''புதுமுகம்தான்; ஆனால் அவரைத் தேடிக் கொண்டிருக்க வேண்டாம்; தயாராகவே இருக்கிறார்'' என்றேன்.

''யார் அது?'' புதிருக்கு விடை தெரியாமல் கேட்டார்கள்.

நான் புன்னகையுடன் மௌனமாக இருந்தேன். ''யோசியுங்கள்'' என்றேன். கல்கி வாசகர்களும் யோசிக்கச் சற்று அவகாசம் எடுத்துக் கொள்ளலாம்!....

**டைரக்டர் ஸ்ரீதர்**



**யா**ரை மனத்தில் எண்ணிக் கொண்டு அவ்வாறு கூறினேன்? தெரியவில்லையா? என் பார்ட்னர்களுக்கும் கூடத்தான் அன்று சஸ்பென்ஸைத் தாங்க முடியவில்லை! சரி, விஷயத்தை விண்டு கூறுகிறேன்:

முன்பு ''காதலிக்க நேரமில்லை'' படத்தில் சாந்தி என்ற பெண்ணை அறிமுகப் படுத்த எண்ணி, பிறகு அவருக்கு மெச்சூரிட்டி இல்லை என்ற கருத்தில் நீக்கி....

ஆ! நினைவு வந்துவிட்டது, இல்லையா?

சாந்தியைத் தொடர்ந்து சித்ராலயாவில் மாதச் சம்பளத்தில் அமர்த்தி, ஷூட்டிங்குகளைக் கவனித்துக் கூச்ச சுபாவத்தை நீக்கிக் கொள்ளுமாறு சொல்லியிருந்தேன் அல்லவா? அவர், நான் நடிப்புச் சொல்லிக் கொடுப்பதையும் நடிக நடிகையர் நடிப்பதையும் தொடர்ந்து கவனமாகப் பார்த்துப் பார்த்து இதற்குள் நிறையத் தெரிந்து கொண்டிருந்தார். அந்தச் சாந்தியைத்தான் இப்போது வெண்ணிற ஆடையில் ''நிர்மலா'' என்ற பெயரில் அறிமுகப் படுத்தத் தீர்மானித்தேன். பார்ட்னர்களும் விஷயமறிந்ததும் ரொம்ப மகிழ்ச்சியோடு சம்மதித்தார்கள்.

அமைந்திருப்பதைக் கண்டு அதனால் பெரிதும் கவரப்பட்டேன்.

''என்ன மூர்த்தி, என் படம் ஒன்றில் உங்களுக்கு ஏற்ற கேரக்டர் இருக்கிறது, நடிக்கிறீர்களா?'' என்று கேட்டதும், எதிர் பாராத தாக்குதலால் சற்று திடுக்கிட்ட அவர், பின்னர் விழித்துக் கொண்டு, ''ஓ! நடிக்கிறேனே; பேஷாக நடிக்கிறேன்'' என்று அவசரம் அவசரமாகச் சொன்னார்!

''மிஸ்டர் மூர்த்தி! ஒரு சின்ன அட்வைஸ்'' என்று ஆரம்பித்தேன்.

''என்ன ஸார்? சொல்லுங்க, எதுவானாலும் அதன்படியே நடந்துக்கறேன்.''

''அட்வைஸ் நடிப்பு சம்பந்தப்பட்டதல்ல; உங்கள் வாழ்க்கை சம்பந்தப் பட்டது. வக்கீலுக்குப் படிச்சிருக்கீங்க. அந்தத் துறையில் உங்களுக்குப் பிரமாத எதிர்காலம் இருக்கலாம். சினிமா சான்ஸை விட மனசில்லாமலும் இருக்கலாம். இந்தத் தொழில்ல 'ரிஸ்க்' அதிகம். நீங்க நடிக்கிற முதல் படம் அமோக வெற்றி பெற்றால், உங்களுக்கு மேலே மேலே வாய்ப்புக்கள் வந்து குவியும். புகழும் கிடைக்கும். ஆனா முதல் படம் எதிர் பார்த்த வெற்றி அடையலேன்னா எதிர் காலம் அவ்வளவு பிரகாசமாயிராது...''







**வெ**ண்ணிற ஆடை படத்தில் நான் அறிமுகப்படுத்திய இன்னொரு புதுமுகம் மூர்த்தி. நிர்மலா போலவே இவருக்கும் ''வெண்ணிற ஆடை'' என்ற தலைப்பு, ஒட்டிக் கொள்ள, 'வெண்ணிற ஆடை மூர்த்தி'யானார் - படம் ரிலீஸ் ஆன பிறகு.

மூர்த்தி சட்டம் படித்த இளைஞர். வக்கீல் ஒருவரிடம் ஜூனியராகச் சேர வேண்டிய அவரை, நண்பர் ஒருவர் எனக்கு அறிமுகம் செய்து வைத்தார். மூர்த்தி என்னிடம் பேசியபோது, இயல்பாகவே காமெடியான பாணிப் பேச்சு அவருக்கு

மூர்த்தி என்னை இடைமறித்து உறுதியான குரலில், ''எனக்கு என்னோட திறமையில் நம்பிக்கை இருக்கு; அதைவிட உங்க திறமையில் ரொம்ப நம்பிக்கை இருக்கு. அதனால் என் நடிப்புலக வாழ்க்கை சிறப்பா அமையும்னே கருதறேன்'' என்றார்.

நான் சிரித்துக் கொண்டே, ''ஆல் ரைட்; ஆல் தி பெஸ்ட்'' என்றேன். கூடவே, ''சினிமா வாழ்க்கை அவ்வளவு பிரகாசமா அமையாட்டா, கறுப்புக் கோட்டை மாட்டிக்கிட்டுக் கோர்ட்டுக்குப் போயிடுங்க'' என்றேன்.



இன்று இங்கிலாந்து நாட்டையே வழிநடத்திச் செல்லும் பிரதமர் ஜான் மேஜர் இரண்டு முறை பேருந்து நடத்துனர் வேலைக்கு முயன்று, அந்த வேலைக்குத் தகுதி இல்லாதவர் என்று ஒதுக்கப்பட்டவர்! கல்லூரிப் படிப்பை எட்டிப் பார்க்கக் கூட வசதி செய்துதர முடியாது போன கீழ்மத்தியதர குடும்பத்தைச் சேர்ந்தவர். பாட்டாளியாக வாழ்க்கை தொடங்கி, ஒரு வங்கியில் எழுத்தராகச் சேர்ந்து, படிப்படியாக முன்னேறியவர்.

- தக்கோலம் அ. முஸ்தபா



''எம்பா, ஏற்கெனவே இருக்கிற சின்னக் குழாய்களைத் தோண்டி எடுத்துட்டு இப்போ புதுசா வேற பெரிய குழாய்கள் எதுக்குப் போடுறீங்க...?''

''பேரூராட்சியா இருந்த நம்ப ஊர், முனிசிபாலிட்டி ஆகிடுச்சே! அதுனால சின்னக் குழாய்களிலே தண்ணி வராம இருந்ததுக்குப் பதிலா இனிமே இந்தப் பெரிய குழாய்களிலேதான் தண்ணி வராது...!''

- கரடிகுளம் ஜெயபாரதிப்ரியா

ஆனால் அதற்கு அவசியமே இல்லாத படிக்கு வெ.ஆ. மூர்த்தி, நிதானமாகவும் படிப்படியாகவும் முன்னேறி, தமக்கென ஒரு நிரந்தர இடத்தைச் சினிமா உலகில் பிடித்துக் கொண்டார்.

வெண்ணிற ஆடை படத்துக்கு இசை அமைத்தவர் விசுவநாதன். ரம்யமான பாடல்கள் அனைத்தும் ஹிட் ஆயின. படம் முடிந்து ரிலீஸ் செய்வதற்கு எனக்கு மிகவும் ராசியான காஸினோ தியேட்டரை அணுகினேன். ஆனால் என்ன ஏமாற்றம்! தியேட்டர் பங்குதாரர்களிடையே ஏதோ மனஸ்தாபம். விளைவு? 'தமிழ்ப் படங்களே திரையிடுவதில்லை' என்று முடிவெடுத்து விட்டார்கள்!

எனக்கு 'திக்'கென்றிருந்தது. 'அபசகுனம்' என்பார்களே, இது அப்படி ஏதாவது இருக்குமோ?' - இந்த எண்ணத்தை ஒதுக்கித் தள்ளிவிட்டு யோசித்தேன். 'ஏன் இது ஒரு நல்ல சகுனமாகவே இருக்கக் கூடாதா?' வேறு தியேட்டர்கள் பற்றி யோசித்தபோது, ஜி. உமாபதி புதிதாகக் கட்டியிருந்த ஆனந்த் தியேட்டர் நினைவு வந்தது. உடனே அவருடன் தொடர்பு கொண்டேன். அங்கும் ஆங்கிலப் படங்கள் தாம் திரையிடப்பட்டு வந்தன. தமிழ்ப் படத்துக்குச் சம்மதம் தெரிவிப்பாரோ?... சற்றுக் கவலையோடுதான் பேசினேன்.

''உனக்கில்லாததா கண்ணு? செய்யுலாம் கண்ணு!'' என்றார் உமாபதி. அவர் நிமிஷத்துக்கு எட்டு ''கண்ணு'' சொல்பவர். மவுண்ட்ரோட்டில் நவீன முறையில் கட்டப்பட்ட, புதிய, பெரிய தியேட்டரில் திரையிடப்படும் முதல் தமிழ்ப்படமாக 'வெண்ணிற ஆடை' விளங்கியது. அதுவே பெருமை சேர்ப்பதாகவும் விளங்கி, மகிழ்ச்சியளித்தது.

ஆனால் வெண்ணிற ஆடைக்கு சென்ஸார், 'ஏ' சர்டிஃபிகேட்தான் கொடுக்கப் போகிறது என்று கண்டேனா, அல்லது, முதல் காட்சியின் போதே தியேட்டருக்குள் ஒரு விபரீதம் நிகழப் போகிறது என்றுதான் எதிர்பார்த்தேனா!

குளிர்ச்சியான சீதோஷ்ண நிலையில் வேலை சுறுசுறுப்பாக நடக்கும். கோடையில் (இந்தியா போன்ற நாடுகளில்) சராசரியாய் அறுபது சதவிகித உழைப்புத் திறனையே நம்மால் வெளிப்படுத்த முடிகிறது. அலுவலகங்களை ஏ. ஸி. செய்வது உழைப்புத் திறனைச் சீர்தூக்கத்தான்! ஆனால் கூடவே பவர்கட் வந்து சீர்குலைக்கிறதே!

- ஆதித்யா

ஜில் ஸ்பெஷல்



சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி

# பார்க் டவுன் பெனிபிட் பண்டு லிமிடெட்

**மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985**

**223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை - 600 003, தொலைபேசி: 582676**

உங்கள் வசதிக்கேற்றவாறு பயனடைய பற்பலச் சிறந்த திட்டங்களை அளிக்கும்
மேற்கண்ட நிறுவனத்தில் உறுப்பினராகுங்கள்.

பிக்சட் டிபாசிட் திட்டம்

| 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு * |
|---|---|---|---|---|---|---|
| 13% | 15% | 17% | 18% | 18.5 | 19% | 20% |

• தனயோகம் டிபாசிட் திட்டம் - வட்டி வீதம் 20%

குறைந்த அளவு டிபாசிட் ரூ.20,000/- காலம் 5 ஆண்டுகள். மாத வட்டிக்கான
செக்குகள் முன் கூட்டியே கொடுக்கப்படும்

சேமிங்ஸ் கணக்குகள் மீது 9.5% வரை வட்டி
உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது. 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## • காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்துவீர்
5 ம் ஆண்டு முடிவில் ரூ.6000/- ஐத் திரும்பப் பெறுவீர்
10 ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/- ஐத் திரும்பப் பெறுவீர்
15ம் ஆண்டு முடிவில் மிகப் பெருந்தொகையாக ரூ.50,000/- பெறுவீர்.

## • பென்ஷனர் நலத் திட்டம்

முதியோருக்கென்றே அளிக்கப்படும் திட்டம்.
சேமிப்பு ரூ.13,000/- வட்டி வீதம் - 19% கால வரம்பு 12 மாதங்கள் மட்டுமே
முன்னதாகவே பெறும் காசோலைகள்.
விதவைகளும், உடல் ஊனமுற்றோர்களும் மற்றும் கல்வி, சமய அறக்கட்டளைகளும் சேர்ந்து பயன் பெறலாம்.

## • பொற்குவியல் திட்டம்

ரூ.100/- மட்டுமே பிரதி மாதம் செலுத்தி 25 வருட முடிவில் ரூ.3 லட்சம் (Rs. 3,00,000/-)
பெற்றுப் பயனடைவீர்.
ஒரே ஒரு தடவை ரூ.6666/-ஐச் செலுத்தி 25 வருட முடிவில் ரூ.3 லட்சத்தோடு நீங்கள்
செலுத்திய பணத்தையும் சேர்த்துப் பெறலாம்.

## • செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ
ரூ.7500/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,20,000/- பெறலாம்.
ரூ.9000/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,44,000/- பெறலாம்.

கடன் வேண்டுமா? எங்களை அணுகுங்கள். நகைக்கடன் சவரனுக்கு ரூ.2400/- வட்டி விகிதம் ரூ.1.85
கடனுக்கு உச்சவரம்பு இல்லை. தருவதில் தாமதமில்லை.. R.D. கட்ட வேண்டியதில்லை...

*கௌரவ ஆலோசகர்:*
**P.பாலசுப்ரமணியம், B.Sc.**
**முதன்மை அறங்காவலர்,**
**கந்த கோட்டம், சென்னை - 3.**

**இயக்குநர் குழுத் தலைவர்**
**R.விவேகாநந்தன் B.Com.**

*பங்குதாரர்களுக்கு மட்டும்.*

Business Hours: Week Days 8.30 a.m. to 12.30 p.m. & 2.00 p.m. to 6.00 p.m. Sunday 8.30 a.m. to 12 noon.
Friday Weekly Holiday.

# வீட்டிலே செய்யலாம் - வித்தியாச கூல் ட்ரிங்க்ஸ்!



● கொட்டை எடுத்த பேரிச்சம்பழம் ஐந்து, கால் தேக்கரண்டி நெல்லிக்காய் பொடி - (நெல்லிக்காயைக் கொட்டை எடுத்து, வெயிலில் உலர்த்தி, மிக்ஸியில் பொடி செய்யலாம்) இரண்டையும் ஒரு டம்ளர் நீரில் மூன்று மணி நேரம் ஊற விட்டு, மிக்ஸியில் போட்டு அரைத்து வடிகட்டி, சுவைக்குச் சிறிது தேன் சேர்த்து, குளிர்ச்சாதனப் பெட்டியில் வைத்துச் சாப்பிட்டால் மிகவும் ருசி, உடம்புக்கும் நல்லது.

● ஐந்து முழு முந்திரியைத் தண்ணீரில் ஊறப்போடவும். ஒரு பெரிய மூடி தேங்காய், இரண்டு ஏலம் எடுத்து, ஊறிய



முந்திரியுடன் சேர்த்து அரைத்து, பால் எடுக்கவும். இத்துடன் சுமார் ஒரு லிட்டர் நீர் கலந்தால் சுவையான பானம் கிடைக்கும். இதில் அடங்கியுள்ள சத்து வேறு எதிலும் இல்லை. ஞாபக சக்திக்கு மிகவும் நல்லது. கோடையில் களைப்படைந்தவர்களுக்கு - குறிப்பாகக் குழந்தைகளுக்கு, வரப்பிரசாதம். குளிர்ச்சாதனப் பெட்டியில் வைத்துக் குடிக்கலாம்.

● காரட்டை வெட்டி மிக்ஸியில் போட்டு இரண்டு ஏலக்காய் சேர்த்து, தண்ணீர் கலந்து அரைக்கவும். மெல்லிய துணியில் வடிகட்டினால் காரட் சாறு தயார். இதனுடன் தேங்காய்ப் பால் பாதி கலந்தால் காரட் கீர்! சுவைக்கு வெல்லம் அல்லது தேன் சேர்க்கலாம். மிக ஆரோக் கியமான கோடைக்கால பானம் இது. டானிக் போன்றது.

● கொத்தமல்லி ஒரு கட்டு வாங்கி, தழைகளை மட்டும் கைப்பிடி எடுத்து இரண்டு தேங்காய் சில்லைத் துண்டுகளாக வெட்டி இரண்டு ஏலம் சேர்த்துக் கொத்தமல்லியுடன் விழுதாக அரைக்கவும். ஒரு டம்ளர் தண்ணீர் விட்டுக் கரைத்து வடிகட்டவும். தேன் அல்லது வெல்லம் சேர்த்துப் பருகவும்.

- டாக்டர் ஏ.ஜி.வி. ரெட்டி எழுதிய 'மருந்தின்றி நோய் நீங்கி வாழ உயிருள்ள இயற்கை உணவுகள்' என்ற நூலிலிருந்து

தொகுப்பு : பானுமதி

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் : ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

